195


# விவேகபோதினி

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.

தொகுதி XIV } துன்மதிஸு கார்த்திகைமீ :: 1921-ம்ஸு டிசம்பர்மீ { பகுதி 6


## முருகன் வழிபாடு

### WORSHIP OF LORD MURUGA

தமரகு ரங்களுங் காரி ருட்பி ழம்பு
மெழுகிய அங்கமும் பார்வையிற் கொளுந்து
தழலுமிழ் கண்களும் காளமொத்த கொம்பும்
—உளகதக்கடாமேல்
தனிவரு மந்தகன் பாசம் விட்டெறிந்து
அடவரு மென்று சிந்தா குலத்தி ருந்து
தமரழ மைந்தருஞ் சோக முற்றி ரங்க
—மரணபக்குவமாநாள்
கமலமு கங்களுங் கோம ளத்தி லங்கு
நகையுநெடுங்கணுங் காதி னிற்று லங்கு
கனகசு தம்பையுந் தோடும் வஜ்ர அங்க
—தமுமடற்சுடர்வேலும்
கடிதுல கெங்கணுந் தாடி யிட்டு வந்த
மயிலுமி லங்கலங் கார பொற்ச தங்கை
கழலொலி தண்டையங் காலு மொக்க வந்து
—வரமெனக்கருள்கூர்வாய் !
இமகிரி வந்தபொன் பாவை பச்சை வஞ்சி
அகிலத லம்பெறும் பூவை சத்தி யம்பை
யிளமுலை யின்செழும் பால்கு டித்தி லங்கு
—மியல்நிமிர்த் திடுவோனே
இறைவரி றைஞ்சநின் ருக மப்ர சங்க்
முறைசெய்தி டும்ப்ரசண் டாவி சித்து நின்ற
ரணமுக துங்கவெஞ் சூருடற் பிளந்த
—அயிலுடைக் கதிர்வேலா !
அமணர டங்கலுங் கூட லிற்றி ரண்டு
கழுவிலு தைந்துதைந் தேற விட்டு நின்ற
அபிநவ துங்ககங் கார திக்கு மைந்த
—அடியவர்க் கெளியோனே !
அமரர்வ ணங்குகந் தாகுறத்தி கொங்கை
தனில்முழு குங்கடம் பாமி குத்த செஞ்சொ
லருணைநெ டுந்தடங் கோபு ரத்தமர்ந்த
—அறுமுகப்பெருமாளே !

இமயமலை யீன்றருளிய அழகிய புதல்வியும், பைங்கொடியைப் போன்ற மெல்லியலாளும், சகல புவனங்களையும் ஈன்றருளிய தாயும், பரம்பொருளின் சக்தியாய் நிற்பவளுமாகிய உமாதேவியாரின் தனபாரங்களினின்று பெருகும் சிறந்த பாலைக்குடித்து வளரும் லீலாவிலாச மாடியவனே ! யாவர்க்கும் இறைவனான சிவபெருமான் சீஷனாக நின்னைவணங்கி நிற்க, ஆகமங்களிற் கூறப்பட்டுள்ள மெய்ப்பொருளை உபதேசித்த ஞானத்தின்மிக்க சுவாமிநாதா ! மருவலர்கள் எதிர்த்துநிற்கும் போர்க்களத்தில் ஒப்புயர்வற்றவனாய் விளங்கும் திறலோனே ! கொடிய சூரபதுமனது உடலை இருகூறாகப்பிளந்த ஒளிபொருந்திய வேலாயுதத்தைக் கையில் தாங்கியவனே ! சைவசமயம் தழைத்தோங்குமாறு திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாராக அவதரித்து கூன்பாண்டியனைச் சுந்தரபாண்டியனுக்கி, அவன்முன்னே சமணர்களை வாதில்வென்று அவனாணையால் எண்ணாயிரம் சமணர்களைக் கழுவிலேற்றி யாவரும் ஆச்சரியமடையச்செய்த பாலகனே ! நதிகளிற் சிறந்த கங்கைக்கு மைந்தனாய் வளர்ந்தவனே ! நின்பால் மெய்யன்பு பூண்ட அடியவர் நின்னை எளிதிலடையுமாறு நின்ற கருணைக்கடலே ! தேவர்களும் வணங்கும் கந்தா ! வள்ளியம்மையின் தனபாரங்களைத்தழுவும் சுகத்தில் மூழ்கும் கடம்பமாலையோனே ! பெரியோர்பலரால்புகழப்பட்டுள்ள திருவருணையிலிருக்கும் பெரியகோபுரத்தி லமர்ந்துள்ள ஆறுமுகப்பெருமாளே ! அடியேனுக்கு நீ ஒரு வரந்தரவேண்டும். அதென்னவென்று கூறுகிறேன், கேள் ! பேரொலி செய்யும் குளம்புகளையும், காரிருட்தொகுதியைப் பூசினாலன்ன தேகத்தையும், பார்க்கும்போதே எரித்துவிடக்கூடிய அக்கினியைக் கக்கும் கண்களையும், காளத்தை யொத்த நீண்டகொம்புகளையும் உடைய உக்கிரமான கடா மாட்டின்மீது, பலர்கூடியிருக்குமிடத்திலும் தானும் தான் மாய்க்கவந்த ஜீவனும் தனியேயிருக்கும்படி செய்துகொள்ளவல்ல இயமன் ஏறிவந்து தனது பாசக்கயிற்றை யெறிந்து எனதுயிரைக் கொள்ளைக் கொள்வானே யென்று கவலையுற்று என் சுற்றத்தவர் அழவும் என் மைந்தர்கள் மனஞ்சோர்வுற்று ஏங்கவும் என் மரணகாலம்

(இதன் தொடர்ச்சி 194-ம் பக்கம் பார்க்க.)



பிரமா நினைத்தால் ஆயுசுக் கென்ன குறை ?



விவேக போதினி

தொ. 14] துன்மதிஹூ :: கார்த்திகைமீ [ப. 6

## கந்த புராணம்

### SKANDA PURANAM

நந்திகேசுவரப் பெருமான் இட்ட சாபத்தைக் கேட்டு அஞ்சி பிரமதேவர் தாம் செய்யப் புகுந்த யாகத்தைநிறுத்தியநாள் முதலாக வெகு காலம் தேவர்களும் முனிவர்களும் அந்தணர்களும் யாதொரு வேள்வியும் செய்யாதொழிந்தனர். ஊழின் வலியினுல் தீயநெறியில் நின்றெழுகி வந்த தக்ஷன் அதை ஆலோசித்து, ஒருநாள் தனது சபையிற் கூடியிருந்த தேவர்களை நோக்கி, "வேதத்தை நன்குணர்ந்த தேவர்காள்! செய்வதற்குரிய வேள்வியை நீங்கள் வெகு காலமாகச் செய்யாதொழிந்ததன் காரணமென்ன?" என்று கேட்டான்.

அதற்குத் தேவர்கள், "ஐயனே! பிரமதேவர் முன்னுளில் இயற்றப்புகுந்த யாகத்தில் பரமசிவனுக்கு அவிர்ப்பாகம் கொடுக்கக்கூடாது என்று ஆணையிட்டாய்! நந்திகேசுவரரும் கொடிய சாபத்தினையிட்டார்! நின்னுணைப்படி நடத்தல் சாத்தியமில்லை யாதலினுல், யாதொரு யாகமும் செய்யாம லிருக்கின்றோம்" என்று உண்மையைத் தைரியமாய் உரைத்தனர். தக்ஷன் நகைத்து, "வெகுகாலத்துக்கு முன் ஒரு நாள் ஈசனுல் அனுப்பப்பட்ட நந்தியிட்ட சாபத்திற்கு இன்னுமா அஞ்சியிருக்கிறீர்கள்? உங்கள் அச்சத்தை ஒழிப்பதற்காக நான் ஒரு பெருவேள்வியை முன்னே செய்து முடிக்கின்றேன். அவ்வேள்வி நிறைவேறி நந்தியின் சாபம் பயனற்றதென நிரூபிக்கப்பட்டபின் நீங்கள் யாகம் செய்யலாமன்றோ?" என்று கூறினுன்.

தேவர்கள் அதற்கிணங்கவே தக்ஷன், அவர்களை அவரவர்கள் நகரங்களுக் கனுப்பிவிட்டு, தேவசிற்பியான விசுவகர்மாவை வரவழைத்து, அளவிடப்படமுடியாத பெரிய யாகசாலையொன்றை முறைப்படி நிருமிக்கும்படி கட்டளை யிட்டான். விசுவகர்மன் அவனிட்ட பணியைச் சிரமேற்கொண்டு கங்காநதிக் கரைக்குச் சென்று ஆங்கு கனகலமென்ற ஒரு அழகிய தலத்தில் வித்தாரமான அற்புத யாக சாலையொன்றை அதிவிரைவில் நிருமித்துப் பிறகு தக்ஷன்பால் திரும்பிவந்து வணங்கி, "ஐயனே! நின் யாகசாலையைக் கட்டிமுடித்து விட்டேன். சென்று பார்ப்பாயாக!" என்று கூறிச் சென்றுன்.

உடனே தக்ஷன் தன் யாகசாலைக்குச் சென்று அதன் வனப்பினைக் கண்ணுற்று வியந்து, அவ்விடத்திற் சிறந்த யாகத்தைச் செய்ய நிச்சயித்து, தன்னருகில் நின்ற முனிவர்கள் பலரைநோக்கி, "யாகத்துக்கு அவசியமான சமிதை, தருப்பை, யூபஸ்தம்பங்கள், ஆடு முதலிய பல்வகைப் பசுக்கள், நல்ல தானியங்கள் முதலியவைகளைச் சீக்கிரம் கொண்டு வாருங்கள்!" எனக் கட்டளையிட்டான். பிறகு காமதேனு, கற்பகவிருக்ஷம், சங்கநிதி, பதும நிதி, நவநிதிகள், தேவமணிகள் முதலியவைகளை வரவழைத்து, "நீங்கள் எனது யாகம் முடிவுபெறும் வரை இங்கேயே யிருந்து, யாகத்தைக் காணவரும் முனிவர் முதலாயினோர்க்கு வேண்டியவைகளைக் கொடுத்துதவுங்கள்!" என்று கட்டளையிட்டான். பிறகு தனது பந்துக்களான முப்பதினுயிரம் முனிவர்களை வரவழைத்து, வருபவர்க்கெல்லாம் திருப்தியாக அன்னம் முதலிய ஆகாராதிகளைக் கொடுக்கும்படி கட்டளையிட்டான். பிறகு தக்ஷன் தேவர்கள், முனிவர்கள், அந்தணர்கள் முதலியோரை யாகத்துக்கு அழைத்துவரும்படி தூதர்களை யனுப்பினுன்.

பிரமன், விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்கள் தத்தம் தேவிமார்களுடன் தக்ஷன் யாகசாலைக்கு வந்து அவனுல் உபசரிக்கப் பெற்று; யாகசாலையில் திவ்விய ஆசனங்களிலமர்ந்தனர். உலகத்திலுள்ள பல முனிவர்களும் அந்தணர்களும் தக்ஷன் வேள்வியைப் பார்ப்பதற்காக அங்கு வந்து கூடினர். தக்ஷனுல் அனுப்பப்பட்ட தூதர்கள் திரும்பிவந்து

தக்ஷனை வணங்கி நிற்க, தக்ஷன் அவர்களை நோக்கி, "சிறந்த தவத்தினை யுடையீர்காள்! நீங்கள் அழைத்தவர்களில் இங்கு வராது தவறினவர்கள் எவரேனுமுண்டோ? உண்டாயின் அவர்கள் யாரெனக் கூறுங்கள்!" என்ருன். அது கேட்ட தூதுவர், "ஐயனே! அகத்தியர், சாகாதியர், அத்திரி, வசிஷ்டர், உலகத்தில் உயர்ந்தவனெனக் கருதப்படும் பிருகு, தவ சிரேஷ்டனான ததீசி, கொடிய சாபத்தீயைக் கக்கும் இயல்புடைய துர்வாசர், ஐம்புலன்களை வென்ற பாராசரர் முதலியோர் மட்டும் இந்த யாகத்தினை இகழ்ந்து இங்கு வரவில்லையென்று நினைக்கிருேம்" எனப் புகன்றனர்.

அது கேட்டுத் தக்ஷன், "முனிவர்களுக்குள் இவர்கள்தாமோ நெற்றிக்கண்ணையுடைய சிவனுக்கு அன்பர்கள்?" என்று கடுங் கோபத்துடன் கூறி, அங்கு கூடியிருந்த தேவர்கள் யாவரும் நடுங்குமாறு சிரித்தான்.

அத்தருணத்தில் ததீசி மாமுனிவர் பல முனிவர்கள் தம்மைப் புடைசூழ்ந்துவர அந்த யாகசாலைக்குள் நுழைந்தார். அது கண்ட தக்ஷன் அம்முனிவர் தனக்கு அஞ்சி அங்கு வந்ததாகக் கருதி மகிழ்வுற்று உள்ளங்குளிர்ந்து அவரைத் தமதருகிலுள்ள ஒரு பெரிய ஆசனத்தி லமர்த்தினன். அவ் வாசனத்தி லமர்ந்த பின், ததீசி மாமுனிவர் தக்ஷனை நோக்கி, "எம்மை யழைத்த காரணமென்ன? இங்கு நீ செய்ய முயற்சிப்பதென்ன? எல்லாவற்றையும் ஒன்று விடாமல் எடுத்துரைப்பாயாக!" என்று கூறினர். அப்போது தக்ஷன் தன் மகளைச் சிவபெருமான் மணந்து மணம் முடிவுபெறுமுன் மறைந்ததையும், தான் தன் மகளையும் சிவபெருமானையும் பார்ப்பதற்காகத் திருக்கைலாயத்துக்குச் சென்றதையும், தன் மகளும் மருமகனும் தங்கள் சேவகர்களான பூதர்களைக் கொண்டு தன்னை அவமானப் படுத்தியதையும், அதனுற் கோபமுற்றுத் தான் சிவ ஆராதனையைத் தடுத்ததையும், தன் தந்தையாகிய பிரமதேவர் யாகம் செய்யத் தொடங்கிச் சிவபெருமானுக்குரிய அவிர்ப்பாகத்தை அவருடைய சேவகன் நந்திக்குக் கொடுப்பதாக நிச்சயித்ததுகண்டு, தான் வெகுண்டு அதைத் தடுத்ததையும், மத்தளம் அடிப்பதான சிறு தொழிலைச் செய்பவனுன நந்தி அது கண்டு சீற்றங்கொண்டு கொடிய சாபத்தினை மொழிந்ததையும், அச் சாபத்துக்கஞ்சி தேவர்கள் வெகு காலமாக வேள்வி செய்யாதொழிந்ததனுல், அவர்களுக்குத் தைரியமுண்டாக்குவதற்காகத் தான் சிவபெருமானுக்கு அவிர்ப்பாகம் அளிக்காமல் ஒரு யாகத்தைச் செய்துமுடிப்பதாக உத்தேசித்ததையும் வித்தாரமாக எடுத்துரைத்தான்.

அது கேட்டு அம்மகா முனிவர் தக்ஷன் செயலானது, புண்ணியம் பயனற்றது, பாவமே ஈட்டத்தக்க பொருளென்று எண்ணும் இழிகுணமுடையோர் செயலைப் போன்றது என்றெண்ணி நகைத்தார். அம் மாமுனிவர் தன் வார்த்தைகளைக் கேட்டுத் தனக்கு யாதொரு பதிலும் உரையாது அவமதிப்பாகச் சிரித்ததும், தக்ஷன் ஊழிக்காற்றில் மிகுந்தெழும் வடவாமுகாக்கினியைப்போல ஊர்த்துவ சுவாசம் விட்டுக் கோபித்துச் சீறி, "நீ முக்கண்ணன் அடியவன் போலும்! அதனுல்தான் என் மொழிகளைக்கேட்டுச் சிரித்திகழ்ந்தாய்!" என்று அதட்டிக் கூறினன்.

அப்போது ததீசிமுனிவர் தக்ஷனை நோக்கி, "பிரமன் முதலாகவுள்ள எல்லையற்ற உயிர்த்தொகை யனைத்தையும் முதன்முதலில் உண்டாக்கும் தந்தையாய் உலகத்தைச் சிருஷ்டித்துக் காத்து அழித்து, உலகெலாம் தாமேயாகி, எங்கும் நிறைந்து நிற்கும் ஒப்பற்ற தனிப்பொருளாய் உயிருக்குயிராய் யாவற்றினும் மேலாய் விளங்கும் பரமேசுவரனை நீக்கியோ நீ யாகம்செய்ய யத்தனித்தாய்! தேவர்க ளனைவருக்கும் கொடுக்கும் சிறந்த அவிர்ப்பாகத்தைப் பெற்றுக்கொள்பவரும், அவ்வவிர்ப்பாகங்களைத் தேவர்களுக்குச் சேர்ப்பிப்பவனுகிய அக்கினிதேவருக்குத் தலைவரும், யாகத்துக்குத் தலைவரும், யாகத்தின் பலனை அளிப்பவரும் சங்கரர்தாமென்று வேதங்கள் கூறுகின்றன. வேள்விக்கு முதல்வராகிய ஸ்தானத்தை வகிக்குந் தகைமைவாய்ந்த தேவர் எவரேனும் இச்சாலையில்உளராகில், அவர் எழுந்து அதைத் தெரிவிப்பாராக! திருமால், பிரமன் முதலிய தேவர்கள் யாவரும் எல்லையற்ற இச் செல்வங்களைப் பெறுமாறு முன்னுளில் அநுக்கிரகித்தவரும், மலரகிதரும், இவர்களுக்கெல்லாம் ஆதிகாரணரும், தமக்கு எவரும் ஆதிகாரணராக விருக்கப் பெருதவரும், கல்லாலின் நிழலில் அமர்ந்து சநகாதி முனிவர்களுக்கு

மெய்ப்பொருளைப் போதித்த எமது சங்கரரேயன்றி அமரர்களுக்குள் வேறு யாவர்? தேவதேவன், மகாதேவன், யாவரினும் சிறந்த ஈசன், எமதிறைவன், மும்மூர்த்திகளில் முதல்வன், எங்கும் வியாபித்துச் சகலமும் தானேயாகி நிற்பவன், சங்காரகர்த்தாவுக்குச் சங்காரகர்த்தாவாயிருப்பவன், உயிருக் குயிராயிருப்பவன், கருணை வடிவமானவன், எல்லாவற்றிற்கும் ஆதிமூலம் என்று வேதங்களெல்லாம் யாரைக் குறிப்பிட்டுக் கூறின? பிரமன் முதலாயினோர் உயிர்த்தொகை யென்றும், பரமசிவனே அவர்களுக்குப் பதியென்றும், அவனிட்ட கட்டளையையே அவர்கள் யாவரும் செய்து வருகின்றனரென்றும்வேதங்கள் உண்மையை எடுத்துக்கூறி யிருக்கின்றன. இவைகளையெல்லாம் மறந்து மதிமயங்கி நீங்காத மாயையிற் சிக்கி அழுந்துகின்றாய்! அந்தணருக்கு முதல்வன் சிவபெருமானென்றும் ஏனையோர்க்கு பிரமன், விஷ்ணு, இந்திரன் என்றும் வேதங்கள் கூறியிருக்கின்றன. ஆதலின், பிராமணர்கள் முறைதவறி தங்கள் தலைவனான சிவபெருமானைத் தவிர்த்து வேறொரு தேவனை முதல்வனாக நாடுதல் தன்னைப் பெற்ற தந்தையை விலக்கி வேறொரு தந்தை தேடுவோர் செயலையொக்கும். ஆகையினால் யாவர்க்கும் மேலாம் ஆதிமுதல்வனாகிய பரமசிவனை இகழ்தல் பேதைமையைக் காட்டுமேயன்றி பெருமையைத் தராது. வேதத்திற் கூறியுள்ள மெய்வசனத்தை யொறுத்து நீ செய்யும் யாகம் நிறைவேறாது; அது பெரிய கலக்கத்தையே யுண்டாக்கும். அமலனது ஆணை செல்வதை நீ காண்பாய்! அவனுக்கு அஞ்சாது நடப்பவர் எவரேனுமுண்டாகில் அவர் மாய்வர்! பிரளய காலத்தில் முத்தலைச் சூலத்தைக் கையிற்றாங்கி யாவற்றையும் சங்கரித்துத் தான் மட்டும் மாயாதுநிற்கும் ஒருவன் சங்கரனே யென்று வேதங்கள் கூறியுள்ளதை யறிந்திலையோ? ஆதலால், ஆதியும் அந்தமுமில்லாத அமலனுக்கு அவிர்ப்பாகத்தை யளித்து வேதத்திற் கூறியுள்ள முறைவழுவாது வேள்வி இயற்றுவாயாக! நீ இப்பொழுது கொண்டுள்ள எண்ணம் தீங்கையே விளைவிக்கும்!" என்று கூறி தக்ஷனைக் கண்டித்து நல்லபுத்தி கூறினார்.

ததீசி மகாமுனிவர் கருணையினாற் கூறிய நற்புத்தியைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளாத தக்ஷன், "சிவனுக்குக் கொடுக்கவேண்டிய முதல் அவிர்ப்பாகத்தை மகா விஷ்ணுவுக்கு அளித்து யாகத்தை நடத்துவேன்!" என்றான். அதற்கு ததீசி, "யாவராலும் புகழப்படும் பெரியோரை இகழ்ந்து சிறியோரை யுயர்த்தல் நற்கதியடையும் மார்க்கமன்று. உங்கள் யாவருடைய உயிர்களுக்கும் இறுதிகாலம் நெருங்கிவிட்டதுபோலும்!" என்று மறுமொழி புகன்றார்.

குற்றம் நிறைந்த குணத்தினனாகிய தக்ஷன் அதுகேட்டு, "ஏ! ததீசி! உனது உருத்திரனைப் போன்ற பதினொருபேர்கள் ஏகாதச ருத்திரர்கள் இருக்கின்றார்கள். மற்றும் அஷ்டதிக்பாலர்களாகிய ஈசானர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு முதல் அவிர்ப்பாகத்தைக் கொடுத்து வேள்வியை நடத்துகிறேன்" என்று துடுக்காய்க் கூறினான்.

அப்போது ததீசிமாமுனிவர், "தக்ஷனே! பிரபஞ்சத்துக்கு ஓர் இறுதியை யுண்டாக்கி, அகில அண்டங்களையும் தனக்குள் ஒடுக்கிக் கொண்டு பிறகு திரும்பவும் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தருளி எவராலும் நினைத்தற்கரியனாய் நிற்கும் உருத்திரமூர்த்திக்கு அவனது அருளினால் அவன் உருவத்தையும் நாமத்தையும் பெற்றவர்கள் ஒப்பாவார்களோ? உருத்திரமூர்த்தி யென்போன் யாவரினும் உயர்ந்த பரம்பொருளாய் நமது இதயத்தாமரையில் நின்று நிருத்தம் செய்பவன். அவன் பொற்பாதங்களை அன்புடன் நினைத்து வழுத்துவோர் அவனுடைய உருவத்தையும் அவன் பெயரையும் பெறுகிறார்களாதலால், அப்படிப்பட்டவர்களைக் கணக்கிடவே முடியாது! ஆனால் ஆதியான சிவபெருமானுடைய திருநாமத்தைப் பெற்றதனாலேயே அவர்கள் அவன் தன்மையடைந்தவ ராகமாட்டார்கள். அவர்கள் கொண்ட குற்றமற்ற வடிவமும் அப்படியே அவனது திருமேனியின் தன்மையை யடைந்ததாகா தெனினும், அவர்கள் பூலோகத்தவராலும் வானவராலும் இறைவனான பரமசிவனாகக் கருதப்பட்டு வணங்கப்படுவர். அளவற்ற காலம் எம்பெருமானிடத்து அன்புபூண்டு ஆராதித்து வந்ததனால் சிவசாரூப்பிய பதவியைப்பெற்ற ஏகாதச ருத்திரர்களும் அஷ்டதிக்பாலர்களும் இந்திராதி தேவர்களைப்போல் இங்கு வரும் தன்மையுடையவ ரல்லர். அவர்

பிள்ளையாரைப் பிடித்த சனி அரசமரத்தையும் பிடித்ததுபோல.

கள் நீ எந்தைபால் அன்பில்லாதவனு யிருப்பதை அறிந்திலர் போலும்!" என்று கூறினர்.

அப்போது தக்ஷன், "மும்மூர்த்திகளில் நான்முகனையும் நாராயணனையும் விலக்கி முத்தொழிலில் ஒரு தொழிலான சங்காரத்தைச் செய்யும் சிவனை யாவர்க்கும் ஆதியெனக் கூறியதேன்?" என்று வினவினன். அதற்குத் ததிசிமுனிவர், "தக்ஷனே! அதற்குரிய காரணத்தைத் தெளிவாகக் கூறுகிறேன், கேள்! ஆதியந்தமில்லாத எமதிறைவனுக்குப் பெயரும் உருவமும் செயலும் இல்லையென்று வேதங்கள் நிச்சயமாய்க் கூறுகின்றன. அப்படிப்பட்டபரம்பொருளான அண்ணல் தனது ஆணையினுல் முன்னம் அந்தகாரத்துள் மூழ்கிய உயிர்த்தொகையின் கொடியவினையை யகற்றத் திருவுளங்கொண்டு, பெயர், உருவம், செயல் இவைகளைத் திருவருளினுற் கொண்டு, முன்புபோல் பிரபஞ்சம் தோன்றுமாறு செய்து, பிறகு பிரமன் முதலான தேவர்களைச் சிருஷ்டித்து, பண்டு அவர்கள் செய்துவந்த தொழில்களைச் செய்துவரும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டு, பின்னர் சங்காரத்தொழில் தன்னுலன்றிதன் மைந்தராகிய அமரராவியற்ற முடியாதென வுணர்ந்து, அத் தொழிலைத் தானே வகித்தான். அன்று தேவர்கள் அவன் பொன்னடி பணிந்து, 'எந்தையே! இத்தொழில்களின் பாரம் சிறியேங்களை விட்டு எப்போது நீங்கும்?' என்று கவலையுடன் வினவினர். அப்போது கருணுசாகரமான எம்பெருமான் அவர்களை நோக்கி, "இத் தொழில்களை நீங்கள் உங்கள் ஆயுள்முழுவதும் செய்ய வேண்டும். இவைகளைப் பாரமென நினைத்தீர்களல்லவா? தூய்மையான மந்திரங்களைச் சொல்லித் திருநீறுண்டாக்கி வணங்கி அதைத் தேகத்தின்மீது அணிந்துகொண்டு, நாவினுல் உச்சரிப்பதனுலேயே முத்தியை எளிதிற் பெறச்செய்யும் பஞ்சாக்ஷரத்தைச் செப்புவீராகில், அத்தொழில்களை எளிதிற்புரியும் வலிமையுறுவீர்; அன்றியும், பூர்வத்தில் நீங்கள் அடைந்திருந்த ஞானமும் மீண்டுவரும்; அதனுல் அழியாத நன்மை யடைவீர்கள்!" என்றருளினன். இதை யறிந்தே வேதங்கள் பரமேசுவரனையே பஞ்சகிருத்தியங்களைச் செய்யும் முதல்வனுகக் கூறுகின்றன. உருத்திரன் என்னும் நாமம் ஒப்புயர்வற்ற அரனுக்கும், அவன் ஈந்தருளும் புத்திரர்களுக்கும், அவனது பாதமலர்களைத் தியானித்துத் துதிக்கும் சிவகணங்கட்கும், ஒப்பற்ற அன்பினுல் சிவ சாருப்பிய பதவியடைந்து அவன் திருமேனி பெற்றவர்கட்கும், அக்கினிக்கும் பொருந்தும். துன்பசாகரத்திற் பட்டோர் யாவரையும் கைதூக்கிக் காக்குந் தன்மையினுல் எம்பெருமான் உருத்திரன் என்னுந் திருநாமம் பெற்றுன். இத்தகைய கருணைவாரிதியே ஆதியாகிய தேவதேவன் என்று முன்னெருநாள் மயக்கமற்றிருந்த பிரமனும் தன்னையணுகித் தங்கள் சந்தேகத்தை நீக்கும்படி கேட்டுக் கொண்ட முனிவர்களுக்குப் போதித்தான். நான் இதுகாறும் மொழிந்தவைகளெல்லாம் அன்புமேலீட்டினுல் பரமனைத் துதித்தசொற்களென்று கருதாதே! அவைகள் சத்தியமென்று வேதங்களும் சாஸ்திரங்களும் விளக்கிக் கூறுவதை நீயே காணலாம். முன்னுளில் உன் தந்தையாகிய பிரமதேவனிடம் இவ்வுண்மைகளையெல்லாம் கேட்டுணர்ந்து மெய்த்தவத்தினை இயற்றி சங்கரனருள் பெற்று வரம்பில்லாத வளங்களடைந்தாய்! நீ அழிந்து போகுங்காலம் நெருங்கிவிட்டதனுல் அவைகளை மறந்தாய் போலும்! நின் தந்தை முதலியவர்களெல்லோரும் தங்களுக்கும் இறுதி நெருங்கிவிட்டதனுல் நின் சபையில் வந்து கூடியிருக்கிருர்கள். நீ மாயையினுல் மயக்கமுற்றிருக்கிருய்! அழியாது பிழைத்திருக்க வேண்டுமென்ற இச்சை உனக்கிருக்குமாகில், பரம்பொருளாகிய அரனுர்க்கு அவிர்ப்பாகமளித்து இச்சிறந்த யாகத்தினை இயற்றுவாயாக!" என்று அருளின் தன்மையால் நற்புத்தி கூறினர்.

மாயையின் வலிமையினுல் தன் சிந்தையில் அகங்காரமே நிறையப்பெற்ற தக்ஷன் தவத்திற் சிறந்த அம்முனிவர் கூறிய நன்மொழிகளைக் கேட்டும் மாயை யகலப்பெருது நகைத்து, "பரம்பொருள் என்னும் மேலோன் இடுகாட்டில் எரியும் உடம்புகளினின்றும் சிந்துவீழும் எலும்புகளையும் தலைகளையும் ஆபரணங்களாக அணிந்துகொள்வானேன்? தேவர்கள் வெந்த சாம்பரை அன்போடு தேகமெல்லாம் பூசிக்கொள்வானேன்? தசைகழிந்த உடலைச் சூலத்திலேந்தித் திரிவானேன்? இடுகாட்டில் விழுந்துகிடக்கும் தலைமயிரைத்

பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது.

தரிப்பானோ? பன்றியின் கொம்பையும் இறந்த ஆமையின் ஓட்டையும் மார்பின்மீது ஆபரணங்களாகப் பூணுவானோ? பிரபஞ்சம் அழியுமாறு உயிர்த்தொகை யனைத்தையும் மாய்த்திடுவானோ? பகவான் என்பவன் புலியின் தோலையுடுத்து, யானையின் அற்பத்தோலினால் தன் வலிமையுள்ள புயங்களைப் போர்த்துக்கொண்டு, அக்கினி, மழு, மான், முத்தலைச் சூலம் இவைகளைக் கையில் தாங்கி நிற்பானோ? எங்குந் திரிந்து பிச்சை வாங்குவானோ? வெறியனைப் போல் நிர்த்தஞ் செய்வானோ? யாவர்க்கும் நாதனாயுள்ளவன் பூதர்கூட்டங்களையே தனது படையாகக்கொண்டு திரிவானோ? விஷத்தைக் கக்கும் கொடிய பாம்புகளைத்தாம் ஆபரணங்களாகப் பூணுவானோ? வெண்ணிறமுள்ள தலையோட்டை ஓர் ஆபரணமாகக்கருதி தன் செஞ்சடாமுடியில் அணிந்துகொள்வானோ? எண்திசைகளையே ஆடையாகவுடுத்த நிர்வாணியாவானோ? மாறுவேடம் பூணுவானோ? பரம்பொருள் என்பவன் ஓர் காளையைத் தன் வாகனமாகக் கொள்வானோ? தன் பசியைத் தீர்த்துக்கொள்ள விஷத்தை யுண்பானோ? சுடலையில் நின்று பேயைப்போலக் கூத்தாடுவானோ? ஒரு பெண்ணைத் தலையிற் சுமந்து, மற்றொரு பெண்ணுக்குத் தனது இடப் பாகத்தையே கொடுப்பானோ? பிள்ளைகளையும் பெறுவானோ? பரம்பொருளுக்குரிய சாந்தத்தை விடுத்து கொடிய குணத்தை கொள்ளுவானோ? பரம்பொருள் செய்யத்தகாத செய்கைகளைச் செய்பவனும் கொள்ளக்கூடாத குணங்களைக் கொண்டவனுமான உங்கள் ஈசன் பரமனல்லனாதலின், நான் புரியும் வேள்வியில் அவனுக்கு அவிர்ப்பாகம் அளிக்கமாட்டேன்!'' எனப் புகன்றான்.

அந்த நிந்தை மொழிகளைச் செவியுற்றதும், அத்தபோதனன் உலகெலாமீந்த எந்நாதனையோ இவன் பழிப்பது என்று கடுங்கோபமுற்று, பரிசுத்தனான சிவபெருமானது உண்மை நிலையை யறியாத இவ்வற்பனுடன் வார்த்தையாடுதல் தகுதியன்றே யெனினும், பிரமன் விஷ்ணு முதலிய தேவர்கள் கூடியுள்ள அச்சபையில் அவன் எந்தையை நிந்தித்த மொழிகளுக்குப் பதிலுரைக்க வேண்டுவதவசியமெனத் துணிந்து, சில உண்மைகளைப் பின்வருமாறு அவனுக்கு எடுத்துரைத்தார்.

"புத்தியற்ற கயவனே! சிவபெருமானது பெருமையை விளக்கும் செயல்களையே இழி செயல்களாகச் சுட்டிக்காட்டி நிந்தித்தாய்! அவைகளின் உண்மையை யுரைக்கின்றேன். கேட்டு உய்ந்துபோ! அரூபியான எங்கள் நாயகன் தன் தண்ணருளினால் ஓர் திருவுருவங் கொண்டு, தேவர்களுக்குள் தலைமைபெற்ற பிரம விஷ்ணுக்களைச் சிருஷ்டித்து, உலகங்களை யெல்லாம் படைத்துக்காக்குங் கடமையை அவர்களுக்கு அளித்து, பிரமனிடத்து நின்று தானே உயிர்களனைத்தையும் சிருஷ்டித்து, விஷ்ணுவினிடத்து நின்று அவைகளைக் காத்து, ஐம்புலன்களுக் குரிய போகங்களை அவைகள் நுகரும்படி செய்து, இறைவனிடத்திலுள்ள தூயவன்பினால் தமது மூன்றை வினையைத் தொலைத்துக் கொண்டாரை முத்தியடையச் செய்து, பிறகு எஞ்சிய உயிர்களனைத்தையும் உலகங்களனைத்தையும் அழிக்கிறார். இப்படியே அவர் யுகங்கள் தோறும் செய்துவருகிறார். அவ்வாறு சங்கரிக்கும்போது சில சமயங்களில் பிரமன் முதலியோர்களின் எலும்புகளை யெடுத்து அணிந்துகொள்வார்; சிலசமயங்களில் அப்பெரியோரின் சிரங்களை யெல்லாம் எடுத்துத் தொடுத்து சிரமாலையாக அணிந்துகொள்வார்; அவர்கள் தலைமயிரை முந்நூலைப்போல அணிந்துகொள்வார்; மற்றும் சில சமயங்களில் அவர் அவர்களைத் தமது முத்தலைச் சூலத்தினால் மெல்லத் தூக்கி ஏந்தி நிற்பார்; பின்னும் சிலசமயங்களில் அவர் அவர்களை நீறாக்கி அந்நீற்றை யணிந்துகொள்வார்; இவ்வாறெல்லாம் ஈசன் அவர்களைச் செய்வது அவர்கள் இயற்றிய அரியதவத்தின் பயனேயாகும். யாவரும் தன் செயலைக்கண்டு வியப்புறவேண்டுமென்ற ஆசையினால் அவர் அப்படிச் செய்யவில்லை. அவர் அவ்வாறு செய்வதற்கு மற்றொரு காரணமு முண்டு. அதென்னவெனில், எவரும் தமது தீவினைப் பயன்களை யெல்லாம் ஒழித்துவிட்டு முத்தி பெறுவதற்கு முதல்வன் பாதங்களை நாடி வணங்குவது அவசியமாதலின், தாமே அம்முதல்வன் என்று யாவரும் எளிதில் அறிந்து கொள்வதற்காகவும் அவர் பிரமன் முதலிய தேவர்களின் சிரங்களை மாலையாகத் தொடுத்து அணிந்துகொண்டார். என்பு மாலை, சிரமாலை, தலைமயிர் இவைகளை யணிவதும், தசைகழிந்த

பிள்ளைக்காரன் பிள்ளைக்கு அழுகிறான், பணி செய்வோன் காசுக்கு அழுகிறான்.

உடலைச் சூலத்திலேந்துவதும் எம்பெருமான் தமக்கு உயிர்த்தொகையின்பாலுள்ள அன்பினுற் செய்யும் செயல்களாகும்."

"எம்பெருமான் பன்றியின் கொம்பையும் ஆமையின் ஓட்டையும் அணிந்ததற்குக் காரணம் கூறுகிறேன், கேள்! முன்னொரு காலத்தில் இரணியாக்ஷன் என்னும் அசுரன் பூலோகத்தைச் சுருட்டித் தன் வயிற்றினுள் வைத்துக் கொண்டு பாதாளத்துக்குப் போய் விட்டான். அப்போது உயிர்களெல்லாம் வருந்தின; தேவர்களெல்லோரும் அஞ்சி நடுங்கினர். அதுகண்ட விஷ்ணுவானவர் பிரமனது நாசியின் வழியாக ஓர் பன்றியாய்த் தோன்றி அண்டத்தின்மீது சென்று மகாமேருகிரியைப்போல் வளர்ந்து, ஓர் இமைப் பொழுதில் பாதாளத்துக்குச் சென்று அவ்வசுரனைக் கொன்று பூவுலகத்தை மீட்டுக்கொண்டு வந்து முன்போல வைத்துப் பிறகு வெற்றி வெறியினுல் தாமே பெரியவரென வெண்ணி மயங்கி உலகத்தை யழிக்கவும் சமுத்திரத்தின் கரையை யுடைத்துவிடவும் தலைப்பட்டார். அப்போது விஷ்ணுவைப் பிடித்த மாயையை யகற்றி உயிர்த்தொகையின் துயரத்தை நீக்க வேண்டுமென்ற கிருபா நோக்கத்துடன் எம்பெருமான் பன்றியுருவத்துடன் ஆரவாரித்து நின்ற விஷ்ணுவையணுகி, அவரது கோடுகளிலொன்றைத் தமது திருக்கரத்தினுல் ஒடித்தார். அப்போது விஷ்ணுவுக்கு உணர்வு திரும்பி வரவே, அவர் தமது இன்னொரு கோட்டையும் ஈசன் ஒடித்து விடுவாரெனப் பயந்து அவரை வணங்கிப் புகழ்ந்தான். அன்று தாம் ஒடித்த விஷ்ணுவின் கோட்டை எப்பெருமான் ஒரு சின்னமாக மார்பில் அணிந்து கொண்டார். இன்றும் அது அங்கிருந்து விளங்குகிறது."

"அன்று தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் மத்தாக உபயோகப்படுத்திய மந்தரகிரி கவிழ்ந்ததைக் கண்ட திருமால் கடலுக்குள் மூழ்கி அம்மலையைத் தம் முதுகின்மீது தாங்கினின்றார். கடலிலிருந்து அமுதம் கிளம்பியதும் சுரர்களும் அசுரர்களும் அதைக்குறித்து ஒருவரோடொருவர் போர்புரிந்தனர். அப்போது திருமால் அப்போரினை விலக்காமல், மந்தரகிரியைத் தாங்கவல்லவர் தேவர்களுக்குள் தாமொருவரே யென்று அகங்காரங் கொண்டு உண்மையை உணராதவராய் உலகத்துக்கு அழிவுண்டாகுமாறு கடல்களைக் கலக்கித் திரிந்தார். ஜீவகோடிகளைக் காப்பதுவே தமது கடமையெனக் கொண்ட சிவபெருமான் விஷ்ணுவிருந்த விடத்துக்கு விரைந்து சென்று, அவ்வாமையை நோக்கிச் சினங்கொண்டு, தமது திருக்கரத்தால் அதைப் பிடித்து அதன் அகந்தையையும் வலிமையையும் பறித்துக்கொண்டார். அப்போது திருமால் தம் சுய வுருவங்கொண்டு எம்பெருமானை வணங்கித் துதிக்க, அவர், "நீ போய் அசுரரை யழித்துச் சுரருக்கு அமுதத்தை யளிப்பாயாக!" என்று பணித்து விஷ்ணுவை விடைகொடுத்தனுப்பி, பிறகு அவ்வாமையின் ஓட்டினையும் திருமால் பெருமாலினுற் கொண்ட அகங்காரத்தைத் தாம் அழித்தருளியதற்கு மற்றொரு சின்னமாகத் தமது மார்பினிற் பூண்டருளினர்."

"மான், மழு முதலியவைகளை எம்பெருமான் ஏந்தியிருப்பதற்குக் காரணம் சொல்லுகிறேன், கேள். முன்பு தாருகவனத்திலுறைந்து வந்த முனிவர்களெல்லாம் ஈசனிடத்து அன்பில்லாதவராய், தமது வேள்வியுந் தவமுந் தாமே ஈசனருளின்றியே தமக்கு முத்தியை யளிக்க வல்லவையெனத் தீர்மானித்து, ஈசனை மதியாமல் வேள்வியையும் தவத்தையுமே புரிந்து வந்தனர். அவ்வாறு கர்மத்தையே கர்த்தாவாகக் கொண்டொழுகிய அறிவிலிகளாகிய முனிவர்கள் செய்கையை கயிலைநாதர் அறிந்து, அவர்களது மாயையையகற்றத் திருவுளங்கொண்டு, திருமாலை யழைத்து அவரை மோகினி வேடந்தரிக்கச்செய்து, தாம் அற்புதச் சுந்தரம் வாய்ந்த தவசிவேடம் பூண்டு, தம்மரையிலுடுத்திருந்த நரசிங்கத்தின் தோலைக் களைந்தெறிந்து நிர்வாணியாகி, திரிசூலத்தையும் பிச்சைவாங்கும் பாத்திரத்தையும் திருக்கரங்களி லேந்திக் கொண்டு, மோகினி வேடந்தரித்த திருமாலை யழைத்துக் கொண்டு தாருக வனத்துக்குச் சென்று, அவரை நோக்கி, "நீ இவ்வனத்திலுறையும் முனிவர்கள் கூடியிருக்கும் இடங்களுக்குச் சென்று அவர்களுடைய மனத்தில் காமத்தீயை யுண்டாக்கி, அவர்களை மாயையிற் சிக்கவைத்து, அவர்களது தவத்தினை யழித்துப் பிறகு எம்மிடம் வந்து சேர்வா

யாக!" எனப் பணித்தனுப்பிவிட்டு, வேதவாக்கியங்களை இன்னிசையுடன் பாடிக்கொண்டு பிச்சைகொள்வானே போல அம்முனிவர் இல்லங்களுள்ள ஊருக்குச் சென்றார். அவரது இன்னிசையைக் கேட்டு மனங்கலரப்பெற்று வீட்டுக்குள்ளிருந்து தெருவுக்குவந்த அம்முனிவர்களின் தேவியர்கள் பிக்ஷாடன மூர்த்தியாய் நின்ற எம்பெருமானது திருவுருவத்தைக்கண்டு மையல்கொண்டு விரகத்தீயிற்பட்டுக் கருத்தரித்து அப்பொழுதே நாற்பத்தெண்ணாயிரம் புத்திரர்களை யீன்றனர். அப்புத்திரர்கள் எம்பிரானை அடிபணிந்து போற்றி நிற்க, அவர், "நீவிர் நம்மை நினைத்து நற்றவம் புரிவீராக!" எனப்பணித்தார். பிறகு தம்மிடத்துக் காதல்கொண்டு தத்தளிக்கும் அம்மாதர்கள் தம்மைத் தொடர்ந்துவர எம்பெருமான் அவ்வூரைவிட்டு வனத்தைநோக்கிச் சென்றார். அதற்குள் மாயவன் தமது மோகன வுருவத்தால் அம்முனிவர்கள் மனத்தில் காமத்தீயைமூட்டி, அவர்கள் நல்லொழுக்கத்தினின்று பிறழ்ந்து நடக்கும்படிசெய்து அவர்களுடைய தவத்தினை யழித்து, தம்மழகினால் அவர்களை யிழுத்துக்கொண்டு எம்பெருமானிருந்த விடத்தை நாடி வந்தார். முனிவர்களால் தொடரப்பெற்ற மாயவனும் அவர்களுடைய பத்தினிகளால் தொடரப்பெற்ற சிவபெருமானும் சந்தித்தகாலையில், சிவபெருமானருளினால் மாயவன் மோகினியுருவம் நீங்கித் தம் சுயவுருவம் பெற்றுநின்றார். அதுகண்ட முனிவர்கள் மயக்கம் நீங்கி, கற்பிற்சிறந்த தமது பத்தினிமார்களின் கற்பை யழித்தவர் சிவபெருமானென்றும், அவரது கட்டளையின்படி திருமால் தங்கள் தவத்தையழித்தாரென்றும் உணர்ந்து கடுஞ்சினங்கொண்டு, கொடிய யாகமொன்றினைச் செய்து சிவனைக் கொல்ல நிச்சயித்து, அங்கே ஓமத்தீயைமூட்டி யாகஞ் செய்தனர். அப்போது அவ்வோமத்தீயினின்று கொடியபுலி யொன்று கிளம்பி, அம்முனிவர்களால் எம்பெருமானைக் கொல்லும்படி ஏவப்பட்டு, எம்பெருமான்மீது சீறிப்பாய்ந்தது. எம்பெருமான் அதைத் தமது திருக்கரங்களாற் பிடித்துக் கிழித்து அதன்தோலை யுரித்து வஸ்திரத்தைப்போல அரையி லுடுத்துக்கொண்டார். பிறகு அத்தீயினின்று ஓர் மழு கிளம்பி எம்பெருமானைக் கொல்லவர, அவர் அதைப் பிடித்துத் தமது திருக்கைக ளொன்றில் ஆயுதமாகத் தரித்துக்கொண்டார். அதன் பிறகு அத்தீயினின்று ஒருமான் உதித்து வானிலெழுந்து தன் நெடுங்குரலால் சராசரங்களையழிக்க ஆரம்பித்தது. அப்போது எம்பெருமான் உயிர்த்தொகை யழியாவண்ணம் தம் கடைக்கண்ணோக்கத்தை அம்மானின்மீது செலுத்தினார். பிறகு அம்மானையழைத்து தமது செவிக்கருகே யமர்ந்து எப்போதும் இனிமையாய்க் கூவும்படி பணித்து, அதைத் தமது இடக்கரங்களி லொன்றினாற் பிடித்து அழகாய் ஏந்தினார். பிறகு அவ்வோமத்தீயினின்று எண்ணிறந்த சர்ப்பங்கள் தோன்றி, முனிவர்களா லேவப்பட்டு எம்பெருமான்மீது சீற்றத்துடன் பாய்ந்தன. அவைகளை எம்பெருமான் முன்னாளில் கருடனுக்கஞ்சித் தம்மிடம் அடைக்கலம் புகுந்த நாகங்களுடன் தமது மார்பில் ஆபரணங்களாக அணிந்துகொண்டார். உடனே அத்தீயினடுவினின்று அளவற்ற பூதவெள்ளம் கிளம்பி முனிவரால் ஏவப்பட்டு எம்பெருமான்மேற் பாய்ந்தனர். அப்போது எம்பெருமான் அவர்களைநோக்கி, "நீவிர் எம்மைவிட் டகலாது என்றும் எமது படையாக விருங்கள்!" எனப் பணித்தார். தாங்கள் அனுப்பிய பூதர்கள் சிவபெருமானுக்குச் சேவகர்களாகி நின்றதைக் கண்டு சீற்றங்கொண்ட முனிவர்களின் கொடிய மந்திரங்களினால் அவ்வோமத்தீயினின்றும் வெண்டலை யொன்று கிளம்பி உலகமனைத்தும் அழியுமாறு சிரித்தது. நகைத்தெழுந்த அவ்வெண்டலை முனிவர்களின் ஏவுதலினால் சிவபெருமானை யணுக, அவர் அதைத் தமது திருக்கரத்தினா லெடுத்து சடையில் தரித்துக்கொண்டார். பிறகு அம்முனிவர்கள் தமது மந்திரங்களைச் சிவபெருமான்மீது செலுத்த, அவைகள் ஒரு உடுக்கையின் வடிவங்கொண்டு புவனமனைத்தும் செவிடுபட ஒலித்தன. ஈசனது கருணையினால் மாயாதுய்ந்தனவேயெனினும் புவனங்கள் மயங்கிக் கலங்கின. அப்போது ஈசன் தமக்கெதிரேவந்த அவ்வுடுக்கையைத் தமது திருக்கரங்களி லொன்றாலெடுத்து ஏந்தி, தமது காதினருகேயிருந்து ஒலிக்கும்படி அதற்குக் கட்டளையிட்டார். அதுகண்ட பின்னும் முனிவர்கள் சங்காரமூர்த்தியைச் சங்கரிக்கவல்லார் எவருமில்லையென்று உணராதாராய், ஓமத்தீயினின்று கிளம்பிய

முயலகன் என்னுமொரு பூதத்தையும் ஓமத் தீயையும் எம்பெருமான்மீது விடுக்க, அவர் அவ்வக்கினியை ஒரு கரத்தி லேந்திக்கொண் டும் முயலகனை ஒரு பாதத்தினுல் தள்ளிக் கீழே யமுழுத்திக்கொண்டும் நின்ருர். பிறகு அம்முனிவர்கள் எண்ணிறந்த சாபங்களை யிட்டனர். யாவும் பயன்படாமற் போனபின், அம்முனிவர்கள் நாணமுற்று வாடினர். அப்போது எம்பெருமான் அவர்களுக்கு நல்லு ணர்ச்சியைத்தர, அவர்கள் இறைவன் பாதங் களில் வீழ்ந்து தங்கள் பிழைகளைப் பொறுத் தருளும்படி வேண்டினுர்கள். இறைவனும் அவர்களை மன்னித்து, சிறந்த தவத்தினைப் புரியும்படி பணித்தார்.''

''தக்ஷனே! பின்னும் எம்பெருமான் பெருமையை எடுத்துக் கூறுகிறேன், கேள்! முன்னெருகாலத்தில் கயாசுரன் என்பவன் பிரமதேவரை நோக்கி அருந்தவமியற்ற, அவர் அவன்முன்னே தோன்றி 'நீ எதை வேண்டித் தவஞ்செய்கிருய்?' என்று கேட்டதற்கு, அவன் அழியாத பேராயுளும், ஆற்றலும், வெற்றியும் வேண்டுமெனக் கேட்க, அவர், ''அவைகளை உனக்குத்தந்தோம். ஆயின், நீ சிவபெருமானை எதிர்ப்பாயாகில் அழிந்துபோவாய்!'' என்று சொல்லிப் போனுர். அதுமுதல் அவ்வசுரன் வானுலகத்துக்குச்சென்று இந்திரனை வென்று துரத்தி, அமராவதி நகரத்தை யழித்து, அஷ்டதிக் பாலர்களையும் துரத்தி, அசுரர்களை யும் இராக்ஷதர்களையு மழித்தான். பிறகு பூமிக்குச் சென்று மனிதர்களை வருத்தத் தொடங்கினுன். தவமுனிவர்கள் அது கண்டு காசியை யடைந்து விசுவநாதருடைய ஆலயத் துக்குட் சென்று எம்பெருமானிடம் முறை யிட்டனர். எம்பெருமான் சருவ சங்கார மூர்த்தி யுருவத்தை யெடுத்துக்கொண்டு, மதி மயங்கித் தம்மையெதிர்த்த கயாசுரனை ஓர் காலி னுல் தள்ளி மற்ருெருகாலை அவன் தலைமீது வைத்து அழுத்தி, அவன் தோலினை யுரித்தார். அச்சமயத்தில் உலகிலுள்ள உயிர்களனைத்தும் எம்பெருமானது திருமேனியின் பேரொளி யைக் கண்ணுற் பார்க்கச் சக்தியற்றவராய்த் தியங்கினர். அதுகண்ட எம்பெருமான் கரு ணையினுல் அந்த யானைத்தோலினுல் தமது திருமேனியைப் போர்த்தி மறைத்தார். எம் பெருமான் வாகனமாகக் கொண்ட விடையை இகழ்ந்து பேசினுய். அது தருமதேவதை யாகும். நீ நிந்தையாகக் கூறியவைகளெல்லாம் எம்பெருமானது பெருமையையும் கருணை யையும் நன்கு விளக்குகின்றன. இறைவன் சுடலையிலாடுகிருர் என்று இகழ்ந்தாய். யுக முடிவில் சங்காரகாலத்தில் உடல் உயிர் யாவும் ஒடுங்கிய இடமன்ருே சுடலையென்று சொல் லப்படுவது! இறைவன் கங்கையைச் சடை யிற்ருங்கியிருப்பதை இகழ்ந்தாயே. உமா தேவியார் விளையாட்டாக தமது திருக்கரங்களி னுல் எந்தையின் கண்களைப்பொத்த, அதனுல் பிரபஞ்சமெங்கும் இருள்சூழ்ந்து ஆருயிர்கள் துயரமுற்றதைக் கண்ட எந்தை தமது நெற் றிக்கண்ணைத் திறந்து அமுதகலைகளைப் பொ ழிந்து எங்கும் இனியவொளி வீசுமாறு செய்ய, உமாதேவியார் அது கண்டு அஞ்சி, எந்தையின் கண்களை மூடிய தமது திருக்கரங்களை விரை வில் எடுத்தபோது விரல்கள் பத்தினின்றும் அச்சத்தினுல் வியர்வை பெருகியோடிப் பத் துக் கங்கைகளாகிக் கடல்களை நிறைத்த பின் உலகங்கள் முழுவதையும் அழிக்கத் தலைப் பட்ட காலத்து தேவர்கள் முறையிட, எந்தை அக்கங்கைகளை யழைத்துத் தம்சடையிலுள்ள ஒரு ரோமத்தின் மீது விட்டுப் பிரபஞ்சத் தைக் காப்பாற்றினுர். அது குற்றமுள்ள செய லாகுமோ? தக்ஷனே! இனி பரம்பொரு ளாகிய சிவபெருமானை நீ நிந்திக்காதே! முன் போலவே அவருடைய உண்மை நிலையை யுணர்ந்து அவரைப் போற்றுவாயாக!'' என்று ததீசிமுனிவர் கூறினுர்.

பவத்தை யீட்டுவதிலேயே கண்ணுயிருந்த தக்ஷன் அம்முனிபுங்கவரது புத்திமதியைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளாமல், ''முனிவனே! பலபல வுரைப்பதிற் பயனென்ன? கைலாய கிரியிலுறையும் உன் இறைவன் பரம்பொரு ளேயானுலும், அவனுக்கு நான் செய்யும் வேள் வியில் அவிர்ப்பாக மளிக்கமாட்டேன். ஆகை யினுல் நீ இத்தகைய வார்த்தைகளை இனிப்பேச வேண்டாம். நீ இவ்விடம்விட்டுப் போய்விடு! நான் எடுத்த காரியத்தை என்னிஷ்டப்படி செய்து முடிப்பேன்!'' என்று அம்முனிவரை அவமதித்துத் துடுக்காய்ப் பேசினுன்.

அவ்வார்த்தைகளைக் கேட்டதும், ததீசிமுனி வர் மனத்தில் கோபம் பொங்கிற்று. அது கண்டு வடவாமுகாக்கினியும் அஞ்சிற்று,

 பிள்ளையில்லா வீட்டில் கிழவன் துள்ளி விளையாடுகிருனும்.

தேவர்கள் செஞ்சந்தளர்ந்தனர், மேருமலையும் சலித்தது, அஷ்ட குலபர்வதங்களும் நிலை பெயர்ந்து அசைந்தன, சமுத்திரங்களேழும் ஓடுங்கின, உலகங்களெல்லாம் நடுங்கின. ததீசி முனிவர் அதையுணர்ந்து தக்கனொருவன் செய்த பிழைகளுக்காக உலகமெல்லாம் நாசமடையும்படி செய்வது தருமமன்றென்று தம் சீற்றத்தையடக்கிக்கொண்டு, தக்ஷனை நோக்கி, "தக்ஷனே! நீ சங்கரனை விலக்கிச்செய்யும் வேள்வி அழியக்கடவது! நின்னோடு இங்கு அமர்ந்துள்ள தேவர்களெல்லோரும் இன்றே அழிவார்களாக!" என்று சாபமிட்டுப் பிறகு அங்கிருந்த அந்தணர்களை நோக்கி, "மறையோர்களே! நீங்கள் உங்கள் குலத்தின் தன்மையை இழந்துவிட்டீர்கள். ஆதலால், நீங்கள் வேதங்களெல்லாம் பரம்பொருளெனக் கூறும் சிவபெருமானையும், அவரன்பரையும், திருநீற்றையும், உருத்திராக்ஷத்தையும் இகழ்ந்து, என்றென்றும் அந்தணராய்ப் பிறந்திறந்து, முத்தியடையாமல் பாசத்தின் வாய்ப்பட்டு, வேதத்திற் கூறப்படாத மார்க்கத்திலேயே நின்றொழுகுவீராக!" என்று சபித்து, பிறகு தம்மைச்சேர்ந்த முனிவர்களுடன் அவ்விடம்விட் டகன்றார். தக்ஷனுடைய செல்வமும், தவமும், கீர்த்தியும், ஆற்றலும், கர்வமும் அவரைப் பின் தொடர்ந்து அவ்விடம்விட் டகன்றன.

(185-ம் பக்கத் தொடர்ச்சி.)

நெருங்கும்போது, நீ உனது செந்தாமரையையொத்த ஆறு திருமுகங்களும், இளமைபொருந்திய உன்முகங்களில் பிரகாசிக்கும் புன்னகையும், காதிலுள்ள குழையளவு ஓடும் பரவிய செந்தாமரைக்கண்களும், செவிகளிரண்டிலும் ஒளிரும் பொற்குதம்பைகளும் தோடுகளும், வஜ்ரத்தினாற் செய்யப்பட்டுள்ள தோளணிகளும், போர்க்குரிய கதிர்வேலும், நொடிப்பொழுதில் அண்டங்களனைத்தையுஞ்சுற்றி வலம் வந்த மயிலும், மிக்க ஒளிவீசும் அழகியபொற் சதங்கைகளும் வீரக்கழல்களும் இனிமையாய்க் கலீர் கலீரென வொலிக்கும் தண்டைகளும் அணிந்துள்ள பாதமலர்களும் யாவும் அடியேன் கண்முன்னே தோன்றுமாறு வந்தருளி, உன் பாதமலர்களை யடைவதாகிய வரத்தை நீ அச்சமயத்தில் எனக்குத் தந்தருளவேண்டும்.

## பால் ஆகாரம்

### MILK DIET

ஆகாரத்தில் பாலை உபயோகிப்பதனால் விளையும் பயனைப் பின்வருமாறு பரீக்ஷை மூலமாய் அமெரிக்க ஐக்கிய மாகாணங்களின் விவசாய இலாகாவில் ஆராய்ச்சி செய்துபார்த்தார்கள். ஒரே வயதான பன்னிரண்டு எலிகளை யெடுத்து ஆறு ஆறாக இரண்டு கூடுகளில் அடைத்துவைத்து, ஒரு கூட்டிலுள்ள எலிகளின் ஆகாரத்தில் பால் சேர்த்தும் மற்றொரு கூட்டிலுள்ள எலிகளுக்குச் சிறிதும் பால்சேராத ஆகாரமளித்தும் சுமார் இரண்டரைமாதம் வைத்துப் பரீக்ஷித்துப் பார்த்தார்கள். இரண்டு கூடுகளிலுள்ள எலிகளுக்கும் கோதுமை ரொட்டி கொடுத்தார்கள். ஆகாரத்தில் பால் சேர்த்து வளர்த்த எலிகள் பருத்த எலும்புகளும், வளர்ந்த தசையும், மிருதுவான மயிரும், ஒளிபொருந்திய கண்களும், நல்ல நிறமும் உடையவைகளா யிருந்தன; அவைகளைப் பார்த்தவுடன், அவைகள் ஆரோக்கியமுள்ளவைகள் என்று யாவரும் சொல்லத் தக்கவைகளா யிருந்தன. பால் சேராத ஆகாரமிட்டு வளர்த்த எலிகள் தசைப்பற்றில்லாமல் எலும்புந் தோலுமாய்ச் சிறிதும் வளர்த்தியில்லாமல் பலஹீனமான சிறு பிராணிகளாக விருந்தன.

பாலிலுள்ள வஸ்துக்கள் தசையை வளர்த்து ஆரோக்கியத்தைத் தருகின்றன. அதிற் கலந்துள்ள சுண்ணாம்பு தேகத்தில் எளிதிற் கலந்து எலும்புகளைப் பெருக்கச் செய்கின்றன. பால் சேர்த்து வளர்த்த எலிகளிருந்த கூட்டின் நிறை அக்காலத்தில் நூற்றுக்குப் பதினொன்று வீதம் அதிகரித்தது. பால் சேராத ஆகாரம் பெற்ற எலிகளிருந்த கூட்டின் நிறை அதே காலத்தில் நூற்றுக்கு இருபது வீதம் குறைந்தது. பாலின் உபயோகத்தை விளக்க இதைவிடத் தெளிவான சாக்ஷியம் வேண்டுமோ?

பாலின் உபயோகத்தை நன்றாய் அறிந்ததனால்தான் நமது முன்னோர்கள் பசுவைச் செல்வங்களனைத்திலும் முதன்மையானதாக மதித்துவந்தனர். பசுவை அலக்ஷியஞ் செய்ததனாலேயே நமது தேசம் க்ஷீணதசை யடைந்திருக்கிறது.

# கல்வியில் சுயேச்சை.

## FREEDOM IN EDUCATION

கல்விப் பயிற்சியில் குழந்தைகளைச் சுயேச்சைப்படி நடந்துகொள்ள விடவேண்டிய அவசியத்தைக்குறித்து "குழந்தை வாழ்க்கை" என்னும் பத்திரிகையில் மிஸ்டர் நார்மன் மாக்மன் என்பவர், படிப்பவர் யாவர் மனத்தையும் யோசனையி லாழ்த்தத்தக்க ஒரு வியாசம் எழுதியிருக்கிருர். அதன் சாரத்தை நாம் இங்கு எடுத்துக்கூறுவோம்.

குழந்தைகளுக்கு உண்மையாகவே சுதந்திரம் கொடுக்க வேண்டுமானுல், அவர்கள் தங்களிச்சைப்படி தங்கள் காரியங்களைச் செய்துகொள்ள இடங் கொடுக்கவேண்டும். பள்ளிக்கூடங்களில் உபாத்தியாயர்கள் அளிக்கும் போதகத்திற் பெரும்பான்மையை நீக்கி, குழந்தைகள் தம்மைத் தாமே போதித்துக் கொள்ளவும், ஒருவரையொருவர் போதித்துக் கொள்ளவும் வழிகளை ஏற்படுத்தவேண்டும். அவ்வழிகளை ஏற்படுத்துங்கால் முக்கியமாய் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியதென்னவெனில், குழந்தையின் வேலை விளையாட்டுத்தான் என்பதான இயற்கை நீதிதான். அன்றியும், வகுப்புகளிலுள்ள குழந்தைகளின் எண்ணிக்கையைக் குறைத்து,ஒவ்வொருகுழந்தையின் சக்தியையும் கவனித்து அதற்குத் தக்கவாறு அக்குழந்தைக்குப் போதிப்பதற்கு உபாத்தியாயருக்குச் சௌகரியங்கள் ஏற்படுத்த வேண்டும்.

இஷ்டமில்லாமல் வேலைசெய்யுங் குழந்தையானது பேருக்குமாத்திரமே வேலைசெய்கிறதாகையால், அவ்வாறு வேலைசெய்வதனுல் வேலையிலேயே இஷ்டமில்லாமலிருக்கும் கெட்ட வழக்கம் அதற்கு உண்டாவதற்கு இடமுண்டு. குழந்தையானது விளையாட்டான வேலையில் களிப்புடன் தன்மனமுழுவதையும் தெரிந்தும் தெரியாமலும் செலுத்துகிறபடியால், வேலையை ஊக்கத்துடனும் சந்தோஷத்துடனும் செய்யும் நல்ல பழக்கத்தைப் பெறுகிறது. எவ்வேலையாயினும் அது திருத்தமாய்ச் செய்யப்பட வேண்டுமானுல், அதைச் செய்பவன் களிப்புடன் அதில் தன் மனத்தைச் செலுத்த வேண்டுவது அவசியமாதலால், இந்நல்ல பழக்கம் குழந்தைப் பருவத்திலேயே ஒருவனுக்கு உண்டாக வேண்டுமென்பது யாவர்க்கும் எளிதில் விளங்கும்.

போதகர்களின் உதவியை அதிகமாகத் தேடாமல் குழந்தை தன்னைத்தானே போதித்துக்கொள்ள வேண்டுமானுல், கருவிகளும் இயந்திரங்களும்பள்ளிக்கூடங்களில்அதிகமாக உபயோகிக்கப்பட வேண்டும். ஊகித்துப்பார்த்தால் அது நோக்குமிடங்களிலெல்லாம் விளையாட்டுக் கருவிகள் கிடைக்குமென்னும் உண்மையைக் குழந்தைக்கு விளக்கிக் காட்டுவதற்கே அக்கருவிகளும் இயந்திரங்களும் உபயோகிக்கப்படவேண்டும்.

பள்ளிக்கூடத்தில் குழந்தைக்குக் கல்வியைப் போதிப்பதற்குச் சிறந்த வழி, பள்ளிக்கூடத்தை விளையாட்டுக்கருவிக் கடையாகவும் புத்தகசாலையாகவும் இருகூறுகளாகப் பிரித்து, குழந்தையை அவ்விளையாட்டுக் கருவிக் கடையின் வழியாகப் புத்தகசாலைக்கு அழைத்துச் செல்வதேயாகும். விளையாட்டுக் கருவிக் கடையின் பக்கத்திலிருப்பதனுல் புத்தகசாலைக்குச் சிறிதும் கௌரவக்குறைவு ஏற்படாது. ஏனெனில், குழந்தை நிறைந்த ஞானத்தை யடையும் மார்க்கம் நிறைந்த ஆநந்தம் பெறுவதேயாகும். பள்ளிக்கூடத்தில் நாள் முழுவதும் பல புத்தகங்களை ஓயாமற் படித்துவிட்டு அந்திப்பொழுதில் சிறிது நேரம் மிதமிஞ்சிக் களித்துக் குதிப்பது நிறைந்த ஆநந்தமாகக் கருதத்தக்கதன்று.

கல்விப் பயிற்சி சிறந்த பலனைத் தரும்படி செய்வதற்கு மற்றும் சில சீர்திருத்தங்கள் அவசியமா யிருக்கின்றன. ஒவ்வொரு குழந்தையின் சக்தியையும் அபிவிருத்தி செய்வதற்குரிய மார்க்கங்களைத் தேடி அவைகளுக்கியையப் போதகமளிக்கவேண்டும். ஒருவகுப்புக்கு ஒரேவிதமான பாடங்களை விதிக்காமல், பலவிதமான பாடங்களை ஏற்படுத்தி, ஒவ்வொரு குழந்தையின் சக்திக்குத் தக்கவிதமான பாடங்களையே அதற்குப் போதிக்க ஏற்பாடு செய்யவேண்டும். குழந்தைகளை ஒருவரோடொருவர் போட்டிபோடச் செய்யும் பரீக்ஷைகளை யொழிக்கவேண்டும். ஏனெனில், அவ்விதப் பரீக்ஷைகள் தங்களுடைய சகபாடிகளை வெல்லவேண்டுமென்ற ஆசையைக் குழந்தைகளின் மனத்தில் உண்டாக்கி, அவர்களைத் தங்கள் சக்திக் கியையாத விஷயங்

பிறக்கிறபொழுதே முடமானுல, பேய்க்குஇட்டுப் படைத்தால் நீருமா ?

களில் உழைக்கச்செய்து அவர்களுக்கு இயற்கையாயுள்ள சக்தியை மிகவும் குறைக்கிறது. இதுவரையில் உபாத்தியாயர்கள் உலகெலாம் படைத்த சர்வேசுவரனது நோக்கத்துக்கு மாறுபாடாக நடந்து, தங்கள் கையிலகப்படும் குழந்தைகள் தங்கள் அபிப்பிராயங்களையும் வழக்கங்களையும் ஏற்றுக்கொண்டு குரங்குகளைப்போல் நடிக்கும்படி செய்து, அவர்களுக்கு சர்வேசுவரன் அளித்த பல்வகைப்பட்ட சக்திகள் வேரோடழியும்படி அவர்களுக்குப் போதகமளித்துவந்தார்களென்பதை உலகத்தாரெல்லோரும் நன்றாய் அறியவேண்டும். அப்போதுதான் மனிதர் தத்தம் சக்திகள் அபிவிருத்தியடையப்பெற்று சர்வேசுவரன் தங்களை உலகத்தாருக்குச் செய்யும்படி கட்டளையிட்ட நன்மைகளைப் புரிந்து, உபயோகமுள்ளதும் சுகம் நிறைந்ததுமான வாழ்க்கையுடையவர்களாவார்களென்பது திண்ணம்!

ஆகையினால் குழந்தைகளின் அபிவிருத்தியை உண்மையாக நாடுவோர் பள்ளிக்கூடங்களைச் சீர்திருத்துவதுடன் திருப்தியடையாமல், அவர்கள் தாய்தந்தையர்களை யணுகி இவ்வுண்மையை அவர்களுக்குத் தெரிவித்து, குழந்தைகள் நன்னெறியில் நின்றொழுகும் வரையில் அவர்களுடைய சுயேச்சையைச் சிறிதும் குறைக்காமல், அவர்களுக்கு இயற்கையாயுள்ள சக்திகளை அவர்கள் அபிவிருத்தி செய்துகொள்ளும்படி விட்டுவிடவேண்டும். தச்சுவேலையில் புத்தி செல்லும் ஓர் குழந்தையைப் பள்ளிக்கூடத்துக்கனுப்பி, அவன் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறாவிடில் அவனை இகழ்வது மகாபாபமான செயலாகும். அப்படியே அவன் அப்பரீக்ஷையில் தேறினாலும், அவன் தனக்கிஷ்டமில்லாத எழுத்து வேலையிற் பிரவேசித்து, அவ்வேலையை நன்றாய்ச் செய்யும் திறமற்று, தன் வாணாள் முழுவதையும் துக்கத்திற் கழிப்பான். ஆகையினால் நமது தேசத்திலுள்ள பெரியவர்கள் இவ்விஷயத்தைக் குறித்துத் தீர்க்காலோசனை செய்து, நாட்டிற் பிறக்கும் மேதாவிகள் விளங்குவதற்குரிய வழிகளைத் தேடுவார்களென்று நம்புகிறோம்.



## நமது சிறு கதை

### OUR SHORT STORY

(171-ம் பக்கத் தொடர்ச்சி.)

### ஏழாவது அத்தியாயம்

### தற்செயலாய்ச் சந்தித்தல்

துரைசாமிபிள்ளை அன்றிரவு தாம் சூது நாணயக்காரர்களைப் பிடித்துவிடுவது நிச்சயமெனவெண்ணிக் களிப்புடன் சாயங்காலம் பூந்தமல்லிச்சாலையின் வழியே நடந்து சென்றார். தாம் காதலித்த பெண்ணை தூரத்தில் நின்றாவது ஒருமுறை காணவேண்டுமென்ற ஆசையுடன் அவர் அச்சாலையிற் சென்றார். பழனியாண்டி பிள்ளையின் பங்களாவை யணுகியதும், அவர் சாலையில் ஓர் மரத்தின்பின் மறைவாக நின்று நெடுநேரம் அப்பங்களாவையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார். தம் காதலியைக் காணாது கண்கள் வெறுப்புற்றன. இனித் தாமதிப்பதிற் பபனில்லையென்று நிச்சயித்தும், ஒரு சமயம் அவள் பங்களாவின் பின்புறத்தில் இருக்கலாமென்று எண்ணி, அவர் அப்பங்களாவின் பக்கத்திலிருந்த ஓர் சந்தின் வழியே விரைவாய்ச் சென்றார். கண்ணுக்கிருட்டும் சமயமாகிவிட்டது. அப்போது அச்சந்தில் கொஞ்சதூரத்துக் கப்பால் தமக்கெதிரே ஒரு பெண் வருவதைக் கண்டு, அவள் தமது காதலியேயென்று கணநேரத்தில் நிச்சயித்து, அவள் தம்மைக்கண்டு நின்று பேசாமல் தம்மைக் கடந்து அலக்ஷியமாய்ச் சென்றால் என்ன செய்வதென்று கலங்கினார். அவளுடைய விவாகத்தைத் தாம் தடுத்து அவள் மனத்தைப் புண்பண்ணியதற்காக அவள் தம்மை விஷத்தைப்போல் வெறுப்பது நிச்சயமெனத் தீர்மானித்து வருந்தினார். அவளைப் பார்க்காமல் பின் திரும்பிச் செல்லவும் மனமில்லை. என்ன செய்வார் பாவம்! தியக்கக் கடலில் மூழ்கித் தத்தளித்தார்.

மோகனசுந்தரியோ தன்னெதிரே தூரத்தில் நிற்பவர் யாரெனத் தெரிந்துகொண்டு விரைவாய் நடந்துவந்து அவரை யணுகி, "துரைசாமி! நீ தானோ?" என்று கேட்டாள். அவள் குரல் நடுங்கிற்று. துரைசாமி பிள்ளையால் வாய்திறந்து பதிற்சொல்ல முடியவில்லை. மோகனசுந்தரி திரும்பவும், "துரைசாமி!

உன்னைக்கண்டு பேசவேண்டுமென்ற ஆவல் எனக்கிருந்தது. நல்லவேளையாய்ச் சந்தித்தேன். உன்மேல் யாதொரு குற்றமுமில்லை. நான் முட்டாள்தனமாய்ச் சில சமயங்களிற் பேசிய வார்த்தைகளே உன்னை இக்குற்றத்தைத் செய்யத் தூண்டினவென்பது என் புத்திக்கு நன்றாய்த் தெரிந்தது. ஆகையினால் நீ பட்ட துன்பங்களுக்கெல்லாம் நானே காரணமென்று தன்னைத்தானே வெறுத்துக் கொண்டிருக்கிறேன்" என்றாள்.

"நான் குற்ற மொன்றும் செய்யவில்லை. கர்மவசத்தால் குற்றவாளியாக எல்லோராலும் கருதப்பட்டேன். நீயும் நான் குற்றவாளி யென்றுதான் நினைக்கிறாயோ?" என்றார் துரைசாமிபிள்ளை. அதற்கு மோகனசுந்தரி, "துரைசாமி! செய்த குற்றத்தைச் செய்யவில்லையென்று சொல்வதிற் பயனென்ன? உன்னுடைய விசாரணையைப்பற்றி தினப் பத்திரிகைகள் கூறியதை யெல்லாம் படித்துப் பார்த்தேன். சிறிதும் சந்தேகத்துக்கு இடமில்லாமல்தான் நிரூபித்துவிட்டார்களே நீ குற்றவாளி யென்பதை! அப்பால் எப்படி வேறு விதமாய் எண்ணுகிறது?" என்று அன்புடன் தன் மனத்திலுள்ளதை உண்மையா யுரைத்தாள்.

"மோகனா! சத்தியமாய்ச் சொல்லுகிறேன்! நான் சூதுநாணயக்காரன் அல்ல! உன்னை விவாகம் செய்துகொள்ள அன்று முயன்றானே அவன்தான் சூதுநாணயக்காரன்! அவன் பெரிய அயோக்கியன்!" என்று துரைசாமிபிள்ளை படப்படப்புடன் கூறினார்.

மோகனசுந்தரி சிறிதும் அமைதிகுலையப் பெறாது, "துரைசாமி! முத்துசாமி பிள்ளையவாள் உன்னிடத்து மிகுந்த அநுதாபமுடையவராயிருக்க, நீ அவர்மீது இப் பெரும்பழி சுமத்துவது தருமமன்று! நீ கொடிய துன்பத்தை அனுபவித்தாய். அதனால் ஒரு சமயம் உன் புத்தி கலங்கியிருக்கலாம். இப்படி யெல்லாம் நீ பேசுவது எனக்குத் துக்கத்தை விளைவிக்கின்றது. உனக்கு நான் ஏதாயினும் உதவிசெய்யமுடியுமா?" என்றாள். துரைசாமி பிள்ளை சிறிது நேரம் மௌனமாயிருந்து பிறகு, "மோகனா! நான் ஒரு கேள்வி கேட்கிறேன். அதற்கு நீ உண்மையாய்ப் பதிலுரைப்பாயே யாகில் என் துயரமுழுவதையும் நான் மறந்துவிடுவேன். உண்மையுரைப்பாயோ?" என்றார். "அப்படியே சொல்லுகிறேன்!" என்றாள் மோகனசுந்தரி.

துரைசாமி.—முன்னொரு தினம் திருநாள் கூட்டத்தில் நீ உன் தகப்பனாரை விட்டுப் பிரிந்து போய்த் திகைத்தபோது என்னைக் கண்டு, அதுகாறும் என்னுடன் பேசாதவள் உன்னை வீட்டுக் கழைத்துப் போகும்படி சொன்னாய்! அன்றுமுதல் என்னுடன் கூச்சமின்றித் தாராளமாய்ப் பேசிக் கொண்டிருந்தாய். சில சமயங்களில் நீ என்னிடம் மிகுந்த பிரியத்தைக் காட்டினாய். அதனால் நான் உன் அன்பைக் குறித்து ஓர் அபிப்பிராயங்கொண்டு களித்து வந்தேன். அவ் வபிப்பிராயம் சரியோ தவறோ?

மோகனா.—துரைசாமி! இக்கேள்வி நீ கேட்பது தகுதியன்று. எனக்கும் முத்துசாமி பிள்ளைக்கும் விவாகம் நிச்சயித்திருப்பது தெரிந்தும் நீ இப்படிக் கேட்கலாமா?

துரைசாமி.—இனி என் வாழ்நாளை எத்தகைய மார்க்கத்திற் கழிப்பதென்பதை உனது பதிலைக்கொண்டே நிச்சயிக்கப்போகிறேன். ஆகையினால் நீ உண்மையாய்ப் பதிலுரைக்கவேண்டும். நான் கொண்ட அபிப்பிராயம் தவறா?

மோகனா.—ஆ! தெய்வமே! நான் எப்படி உண்மையை யுரைப்பேன்! துரைசாமி! அக்கேள்வியை இன்னொருமுறை கேட்காதே!

துரைசாமி.—நீ பதிலுரைக்க வேண்டாம்! உண்மையை யறிந்துகொண்டு விட்டேன். நம்மைக் காப்பாற்ற ஈசனொருவர் இருக்கிறார். போய் வருகிறேன்.

இவ்வாறு கூறிவிட்டு, துரைசாமிபிள்ளை அவ்விடம்விட் டகன்று வெகு விரைவாய் நடந்து சென்றார்.

## எட்டாவது அத்தியாயம்

## சூதுநாணயக்காரர் சூழ்ச்சி

இரவு சுமார் ஒன்பது மணியிருக்கும். அமாவாசையிருள் எங்கும் சூழ்ந்திருந்தது. திருவல்லிக்கேணியில் அநுமந்தலாலா தெருவின் வடவண்டைக் கோடியில் மின்மினிப்பூச்சியைப்போல் எரிந்துகொண்டிருந்த முனிசிபல் விளக்கு அவ்வந்தகாரத்தை அதிகரிக்கச்செய்தது. துரைசாமி பிள்ளை கீழண்டைச்சாரியி

னேரமாய் மெல்லமெல்ல நடந்துபோய் எட்டாவது கதவிலக்கமுள்ள வீட்டையடைந்து, தாளிடாமல் சும்மா மூடியிருந்த கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்து கதவை மூடிவிட்டு, இருளில் கைகளினாலெங்கும் பரிசித்துப் பார்த்துக்கொண்டுபோய், பலகையிணைக்கப்பட்டிருந்த ஓரிடத்தை யடைந்து அப்பலகையின்மீது கையிற் பட்ட ஒரு பிடியை மெல்ல அழுத்தினார். ஓசையின்றி அப்பலகையினடுவே ஓர் திறப்பு உண்டாயிற்று. துரைசாமி பிள்ளை அதன் வழியே நுழைந்து பார்த்ததில், தாம் நின்றவிடம் ஒருசிறிய அறையென்றும், அதற்குப் பக்கத்து அறையில் பிரகாசமான வெளிச்சமிருந்ததென்றும், அவ்வறைக்கும் இவ்வறைக்கும் இடையில் பலகையடைப்புத்தா னிருந்ததென்றும் பலகையிடுக்கின் வழியே அடுத்த வறையிலிருந்து வந்த வெளிச்சத்தினால் அவர் தெரிந்துகொண்டார். உடனே அந்தப் பலகை யடைப்பை யணுகித் தடவிப் பார்த்ததில், அவ்வடைப்பின் நடுவில் ஒரு சிறு பலகை ஜன்னல் நகர்ந்து இடைவெளி யுண்டாக்குவதைக் கண்டு, அப்பலகையை இரண்டு அங்குலம் தள்ளி இடைவெளியின் வழியாக அவ்வறையைக் கவனித்தார்.

அவ்வறையின் ஒரு மூலையில் ஓர் உலை உக்கிரமாய் எரிந்துகொண்டிருந்தது. அதன்மீது ஓர் பெரிய குவை மழுப்போற் காய்ந்து ஜ்வலித்துக்கொண் டிருந்தது. அருகில் கூடுநாணயஞ் செய்வதற்குரிய ஆயுதங்கள் பல கிடந்தன. அவ்வறையில் மனிதர்கள் இருந்ததாகத் தெரிந்ததே யெனினும், ஓர் தட்டி மறைத்துக்கொண்டிருந்ததனால், எத்தனை பேர்கள் இருந்தார்களென்றும் அவர்கள் யாரென்றும் அவரால் தெரிந்துகொள்ள முடியாமற் போயிற்று. துரைசாமி பிள்ளை அப்பலகையைப் பின்னும் கொஞ்சம் தள்ளி எட்டிப்பார்த்தார். அப்போது ஒரு அதிசயம் சம்பவித்தது. "உன்னைப் பிடித்துக்கொண்டுவிட்டேன்! நகர்ந்தால் உன்னைக் சுட்டுவிடுவேன்!" என்று யாரோ ஒருவர் அவர் காதிற் சொன்னார். அடுத்த நிமிஷத்தில் இருவர் அவருடைய இரு கைகளையும் இறுகப் பிடித்துக்கொண்டார்கள். துரைசாமிபிள்ளை தம்மை விடுவித்துக்கொள்ள முயன்றார். உடனே அவரது இரு கைகளும் பின்புறத்திற் சேர்த்து விலங்கிடப்பட்டன; அவரது கால்கள் கயிற்றினால் இறுகக் கட்டப்பட்டன; வாயில் சீலைத் துணியும் வைத்து இறுக்கப்பட்டது. அப்போது இன்னொரு அதிசயம் சம்பவித்தது. ஒருவர் உள்ளே நுழைந்து லாந்தரை உயரத் தூக்கிப் பிடித்தார். அதுவரையில் தாம் கூடுநாணயக்காரர் கையிற் சிக்கிக் கட்டுண்டதாக எண்ணிய துரைசாமிபிள்ளை தாம் போலீஸ்காரர் கையிலகப்பட்டுக்கொண்டதாகக் கண்டுகொண்டார். புதிதாய் உள்ளேநுழைந்த போலீஸ் உத்தியோகஸ்தன் துரைசாமிபிள்ளையை நோக்கி, "துரைசாமிபிள்ளை! நீ இதில் சம்பந்தப்பட்டிருப்பாய் என்று அப்போதே நிச்சயித்துவிட்டேன். உன்னைத் துன்பப்படுத்துவதில் எங்களுக்குச் சிறிதும் இஷ்டமில்லையே யெனினும், நீ கூவி மற்றவர்களுக்கு எங்கள் வரவைத் தெரிவிக்காமலிருக்க வேண்டுமே யென்று உன் வாயிற் சீலைத்துணியை யடைத்திருக்கிறோம். வாயைத் திறந்துகொண்டு கூவ முயலாதே!" என்று தாழ்ந்த குரலிற் சொன்னார்.

அப்போது பலர் அவ்வறைக்குள் நுழைந்தார்கள். அவர்களில் ஒருவர், "தலைவனாகிய துரைசாமிபிள்ளை அகப்பட்டுக்கொண்டான் போலிருக்கிறதே! வாருங்கள், மற்ற அயோக்கியப் பயல்களையும் பிடிக்கலாம்! இவனை நாங்கள் இதுவரையில் ஒளிந்திருந்த அறையில் வைத்துக் கதவைப்பூட்டிக்கொண்டு வாருங்கள்!" என்றான். துரைசாமி பிள்ளையைப் பிடித்துநின்றவர்கள் அவரை யிழுத்துக்கொண்டுபோய் அந்தகாரம் நிறைந்த ஓர் அறைக்குள்ளிட்டு, அவ்வறைக் கதவைப் பூட்டிக்கொண்டு சென்றனர்.

துரைசாமிபிள்ளை தமது நிலைமையை ஆராய்ந்துப்பார்த்தார். முதல்தடவை தம்மீது சாட்டப்பட்ட குற்றத்தைப் பொய்யென நிரூபிக்கத் தாம் முயலுவதே பித்தன் செயலென வுணர்ந்த துரைசாமிபிள்ளை இனி தாம் நல்லொழுக்க முள்ளவனென நிரூபிப்பது அசாத்திய மெனத் தேர்ந்தார். பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காய் முடிந்ததேயென வருந்தினார். தீபாந்தரச் சிக்ஷையடைந்து தமது வாணாளைக் கசடர்களுடன் கழிப்பதைத் தவிர வேறுகதி தமக்கு இனி இல்லையெனத்தேர்ந்து தம்மைத் தாமே நொந்துகொண்டார். துயரம்

பிறர் பொருளை இச்சிப்பான் தன் பொருளை இழப்பான்.

யிருந்து அவர் கண்களினின்றும் நீர் பெருகிற்று.

அச்சமயத்தில் யாரோ ஒருவர் தமக்கு அருகில் நிற்பதாக வுணர்ந்தார். பூட்டிய அறைக்குள் யார் எப்படித் தம்மை அணுகியிருப்பார்களென்று அதிசயித்தார். அவர் அருகே நின்றவர் மிகவும் தாழ்ந்தகுரலில், "துரைசாமிபிள்ளை! நல்லவேளையாய் உம்மை இவ்வறையிலிட்டுப் பூட்டினார்கள்! உம்மை விடுவிக்க வந்திருக்கிறேன்!" என்று அவர் காதுக்குள் உரைத்தார். அக்குரலினால் துரைசாமிபிள்ளை தம்மருகில் நின்றவர் சூதுநாணயக்காரர் தலைவரான கங்காதரமுதலியார் என்று தெரிந்துகொண்டான். ஆயினும், அவர் வாயில் சீலைத்துணி அடைத்திருந்தபடியால், யாதும் சொல்லமுடியாமல் சும்மா நின்றார்.

கங்காதரமுதலியார், "துரைசாமி பிள்ளை! நீர் மிகவும் எளிதில் ஏமாந்துபோய், நாங்களிட்டவலையிற் சிக்கினீர்! அன்று சங்கரய்யர் காப்பிஹோட்டலில் உம்மைஅடையாளந் தெரிந்துகொண்டதுமுதல் நான் இதுவரை செய்ததெல்லாம் ஆயுள் பரியந்தம் உம்மைக் கட்டுப்படுத்திவைக்கத்தக்க வலையிற் சிக்கவைப்பதற்காகத்தான். ஹாஹா! குடிகாரன் வேஷம் போட்டா என்னை ஏமாற்றப் பார்த்தீர்? உமக்காகத்தான் இவ்வீட்டை அமர்த்தி வேண்டிய ஆயுதங்களையெல்லாம் சேகரித்துவைத்தேன். ஏ! அப்பா! எவ்வளவு பணம் செலவாயிற்று தெரியுமா? நானே அவ்வேற்பாடுகளெல்லாம் செய்துவைத்துவிட்டு, போலீஸ்காரர்கள் இன்றிரவு இங்குவரவும் ஏற்பாடு செய்தேன். உம்மால் எனக்கு எவ்வளவு சிரமம் தெரியுமா? நீர்தாம் சூதுநாணயக்காரரது தலைவன் என்று போலீஸ்காரர்களுக்குப் பல கடிதங்கள் கிடைத்திருக்கின்றன. இனி நீர் தப்புவதுகிடையாது; அதாவது, நான் உமக்கு உதவிசெய்யாவிட்டால், நீர் தப்பமுடியாது. நான் உமக்குப் புத்திகூறுகிறேன். கேட்டுப் பிழைத்துப் போம்! என்னை வெல்ல உம்மாலும் முடியாது, உம்மைப்போல ஆயிரம்பேர்கள் திரண்டாலும் முடியாது. சொல்வதைக் கவனித்துக் கேளும். பின்புறமாகச் சேர்த்து விலங்கிடப்பட் டிருக்கிற உமது கைகளுக்குச் சமீபத்தில் ஒரு காகிதத்தை நீட்டி ஒருகையில் ஒரு பேனா கொடுக்கிறேன். தயவுசெய்து அதில் உமது கையெழுத்தைப் போடும். உம்மை இப்பரிதாப நிலைமையிலிருந்து விடுவிக்கிறேன்" என்றார். பிறகு அவர் ஒருபேனாவை துரைசாமிபிள்ளையின் ஒருகையிற் கொடுத்து கையெழுத்துப் போடும்படி வேண்டினார். துரைசாமி பிள்ளை பேனாவைப் பிடிக்க மனமில்லாதகாரணத்தினால் கைகளை இறுக மூடிக் கொண்டார்.

கங்காதர முதலியார், "நன்றாய் யோசித்துப் பாரும்! நீர் போலீஸ்காரர் கையில் கையுங் களவுமாக இரண்டாவது முறை அகப்பட்டுக் கொண்டிருக்கிறீர். இம்முறை உமக்குத் தீபாந்தரச் சிக்ஷை கிடைப்பது திண்ணம். இதில் கையெழுத்துப் போடும்; உம்மை விடுவித்து, உமக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்கிறேன். பேனாவைப் பிடியும்" என்று சொல்லி மறுபடியும் பேனாவை நீட்டினார். துரைசாமி பிள்ளையின் இறுக மூடின கைகள் திறக்கவில்லை. அச்சமயத்தில் அறைக்கு வெளியே ஏதோவொரு சப்தம் கேட்டது. அப்போது கங்காதர முதலியாருக்கு வேறொரு எண்ணம் தோன்றிற்று. உடனே அவர் துரைசாமி பிள்ளையின் விலங்குகளைக்கழற்றி, கட்டுகளைத் தறித்து, வாயிலிருந்த சீலைத்துணியையும் எடுத்தெறிந்தார். பிறகு அவர் துரைசாமி பிள்ளையை நோக்கி, "சிறிதும் சப்தம் செய்யாமல் விரைவாய் நடந்து என்கூட வாரும். உம்மைத் தப்புவிக்கிறேன்!" என்று சொல்லி, துரைசாமி பிள்ளையின் கையைப் பிடித்துக் கொண்டு அநேக இரகசிய வழிகளின் வழியே சென்று இரண்டு நிமிஷப்பொழுதில் பத்திரமாய் அவ்வீட்டைவிட் டகன்று வெங்கடரங்கம்பிள்ளை தெருவில் நுழைந்தார்.

அப்போது கங்காதரமுதலியார், "உம்முடன் ஐந்துநிமிஷ நேரம் பேசவேண்டும். எனது இருப்பிடத்துக்கு வருகிறீரா? அல்லது இங்கேயே தெருவில் நடந்துகொண்டே பேசலாமா?" என்று துரைசாமி பிள்ளையைக் கேட்டார். அதற்குத் துரைசாமிபிள்ளை, "பேசுவதற்கென்ன இருக்கிறது? அக்காகிதத்தில் ஒருநாளும் நான் கையெழுத்துப் போடமாட்டேன். உம்முடைய கூட்டத்தைச் சேரவும் மாட்டேன். எவ்வளவு கஷ்டப்படவேண்டியிருந்தாலும் என்னைச் சூழ்ந்துள்ள பழியை

பிள்ளையைச் சாக்கிட்டுப் பூதம் விழுங்குகிறது.

யகற்றிக்கொள்ள முயற்சி செய்யாமலிருக்க மாட்டேன்!" என்று பதிலுரைத்தார்.

கங்காதரமுதலியார் நகைத்து, "துரைசாமி பிள்ளையவாள்! நீர் நிரம்பவும் வீம்புக்காரர். உம்மைப் போலீசார் கையில் பிடித்துக் கொடுப்பதற்காகச் சூழ்ச்சிசெய்தேனே; அது நீர் சிறிதும் சந்தேகமுறாமல் பலித்ததல்லவா? ஏன் வீணைக் கஷ்டப்படுகிறீர்? நீர் இனி வெளியில் தலைகாட்ட முடியாது. எங்கு கண்டாலும் போலீஸ்காரர் உம்மைப் பிடித்துக் கொள்வார்கள். உமக்குத் தீபாந்தரத் தண்டனையும் கிடைக்கும். ஆகையினால் நீர் என் கூட்டத்துக்கு இனி ஒரு தொந்தரவும் செய்ய முடியாது. ஆகையினால் உம்மைக்கேட்டு அக்காகிதத்தில் கையெழுத்து வாங்கவேண்டுவது அவசியமில்லை. உம்மை நான் மடுத்த வலையிலிருந்து விடுவித்தும் விட்டேன். நீர் எனக்கும் என் கூட்டத்தவருக்கும் தீங்கு செய்து வந்தும் நீர் தீபாந்தரத்தண்டனை யடையும் ஸ்திதியிலிருக்கும் சமயத்தில் உம்மை நான் விடுவிப்பது உமக்கு ஆச்சரியத்தை விளைவிக்கலாம். ஆனால் யோசித்தால் அது அவ்வளவு ஆச்சரியத்தைத் தரத்தக்கன்று. போலீஸ்காரர் கையிற் சிக்காமல் ஓடி யொளிய வேண்டிய நீர் எங்களுக்குத் தீங்கு செய்ய முயலமுடியாது. ஆனால் உம்மைக் கோர்ட்டுக்குக் கொண்டுபோய் நீர் செய்த குற்றத்தைப்பற்றி விசாரித்தால், ஒருசமயம் உமக்கு எங்கள் சமாசாரம் அதிகமாகத் தெரிந்திருந்து அதை நீர் சொல்லி எங்களுக்கு அதனால் பெருந்தீங்கு நேரிடலாம். ஆகையினால் உம்மைக் கோர்ட்டில் விசாரிக்காமலிருப்பதே நலமெனத் தீர்மானித்தேன். என்னுடைய தீர்மானம் சரிதானே?" என்றார். துரைசாமி பிள்ளை, "வீரபத்திர முதலியார் செய்யும் தீர்மானம் எப்போதும் சரியாகத்தானிருக்கும். கேட்பானேன்?" என்றார்.

கங்காதரமுதலியார் திடுக்கிட்டு, "ஆ! நாகலிங்க முதலியார் சோற்றுக் கடையில் வந்த செவிட்டுக் கூனன் நீர்தாமோ? அப்போதே சந்தேகித்தேன். பார்த்தீரா? இப்படியேதாவது உமக்கு எங்கள் இரகசியம் அதிகமாகத் தெரியலாமென்று சந்தேகித்தே உம்மை இன்று விடுவித்தேன். ஒரு வார்த்தை சொல்லுகிறேன், கேளும். வேறு நாட்டுக்குச் சென்று வசிப்பதற்கு வேண்டிய பொருள் தருகிறேன். இந்நாட்டைவிட்டுப் போய்விடும். அல்லது இந்நாட்டி லிருந்துகொண்டே எங்கள் வழிக்கு வராமலிரும். சிறிது பொருளும் அப்போதைக்கப்போது தருகிறேன்; உம்வழிக்கும் நாங்கள் வரவில்லை. இவ்விரண்டு வழிகளும் உமக்குப் பிடிக்காமல், எங்களுக்குத் தீங்கிழைக்க இனியும் முயலுவீராகில் உம்மைப் பொடி பொடியாக்கி விடுவேன்! உமது தீர்மானமென்ன? யோசித்துச் சொல்லும்!" என்றார்.

துரைசாமி பிள்ளை, "யோசிப்பதற்கொன்று மில்லையே. இச்சம்பாஷணை ஆரம்பிக்கும் போதே என் தீர்மானத்தைத் தெரிவித்துவிட்டேனே. உமது கூட்டத்தைப் போலீசார் கையிற் பிடித்துக் கொடுக்கும் வரையில் எனக்கு ஊணுறக்கத்தில் இச்சையிராது. என்மீதுள்ள பழியை யகற்றிக் கொள்ளாமல் நான் ஜீவித்திருக்கமாட்டேன்" என்று கண்டிப்பாய்ச் சொன்னார்.

கங்காதரமுதலியார், "சரி அப்படியானால் நம்மிருவருக்கும் போர்தானா? உமதிஷ்டம்!" என்று சொல்லிவிட்டு தேர்த்தெருவுக்குள் நுழைந்தார்.

## ஒன்பதாவது அத்தியாயம்

## மோகனசுந்தரியின் மாமன்

முந்திய அத்தியாயத்திற் கூறிய சம்பவம் நடந்த மறுநாள் மத்தியானம் பழனியாண்டி பிள்ளை வீட்டுக் கூடத்தில் அவர் மனைவி பங்கஜத்தம்மாள், அவர் மைத்துனர் முத்துக்குமாரபிள்ளை, அவர் பெண் மோகனசுந்தரி, புரோகிதர் குருநாதையா இவர்கள் உட்கார்ந்து பேசிக்கொண் டிருந்தார்கள். சிறிதுநேரம் ஏதேதோ ஊர் வர்த்தமானங்களைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தபின், குருநாதையா திடீரென்று பங்கஜத்தம்மாளை நோக்கி, "அம்மா! அன்று உங்களெல்லோருக்கும் அவ்வளவு துயரத்தை விளைவித்தானே சூதுநாணயக்காரன், அவன் சமாசாரம் புதிதாக ஒன்று வெளியாயிருக்கிறதே; அது தெரியுமா?" என்று கேட்டார்.

பங்கஜத்தம்மாள் மிக்க அனுதாபத்துடன், "ஐயோ பாவம்! துரைசாமி பிள்ளை நிரம்பவும் யோக்கியனாகத்தா னிருந்தான். எங்களுக்கும் பெரிய உதவியாயிருந்தான். அவனைப்பற்றி

பிள்ளை வரத்திற்குப்போய், புருஷனைப் பறிகொடுத்ததுபோல்.

நினைக்கும்போது நிரம்பவும் வருத்தமாயிருக்கிறது" என்றாள். அதற்கு குருநாதையா, "அம்மா நீங்கள் நிரம்பவும் குணசாலி யானதால், அவனிடத்தில் அநுதாபப்படுகிறீர்கள். ஆனால் அவ்வநுதாபத்தைப் பெற அவன் அர்கதையுள்ளவனல்ல. பெரிய மோசக்காரன்! நல்லவன்போல் வேஷம் போட்டு எத்தனையோ சூதுநாணயங்களைச் செய்து நாட்டிற் செல்லவைத்து விட்டானே! நிரம்ப வஞ்சகமுள்ளவன்!" என்றார்.

யார் என்ன சொன்னாலும் அதற்குப் பிரதி சொல்லிக் கக்ஷியாடுவதில் மிகுந்த பிரியமுள்ளவரான முத்துக்குமார பிள்ளைக்கு தமது சக்தியைக் காட்டச் சரியானசமயம் வாய்த்துவிட்டது. முகமலர்ச்சியுடன் அவர் புரோகிதரை நோக்கி, "என்ன, குருநாதைய பந்துலு! அம்மனிதன்மீது உமக்கு ஏன் அவ்வளவு துவேஷம்? முன்பு அவன் கேஸ் விசாரணை நடந்தபோது நான் பத்திரிகைகளைக் கவனமாய்ப் படித்தேன். அவன் குற்றவாளியென்று நிரூபிக்கத்தக்க சாக்ஷியம் சிறிது மிருந்ததாகத் தெரியவில்லை. அப்படியிருக்க அவனை வஞ்சகனென்றும் மோசக்காரனென்றும் பலவாறு திட்டுகிறீரே! இது தர்மமா?" என்றார்.

"அவன் குற்றவாளி யென்று நிரூபிக்கத்தக்க சாக்ஷியமில்லை யென்று சொன்னீர்கள்? ஹைகோர்ட்டில் ஜூரிவைத்து நடந்த கேஸ் அல்லவோ அது! தகுந்த சாக்ஷிய மில்லாவிட்டால் தண்டிப்பார்களா?" என்று ஆச்சரியத்துடன் கூறினர் புரோகிதர் குருநாதய்யா.

முத்து.—ஆமா! ஹைகோர்ட்டில் ஜூரி வைத்து நடத்தினால், தவறு ஏற்படவே ஏற்படாதோ? யாதுமறியாத ஏழைகள் எத்தனை பேர்கள் அநியாயமாய்த் தண்டனை யடைகிறார்கள் தெரியுமா?

குரு.—ஏதோ ஆயிரத்தி லொன்று அப்படி ஏற்படலாம்.

முத்து.—ஆயிரத்தி லொன்று? நூற்றில் எண்பது அப்படி ஏற்படுகிறது. அது போகட்டும். நீங்கள் சொல்லுகிறபடியே வைத்துக் கொண்டாலும், இம்மனிதன் கேஸ் ஏன் அந்த ஒரு கேஸாக இருக்கக்கூடாது?

குரு.—பிள்ளையவாள்! அப்படி எண்ணுவதற் கிடமில்லை. இன்னொருமுறை அதே மனிதன் சூதுநாணயஞ் செய்யுமிடத்தில் குற்றஞ் செய்துகொண் டிருக்கும்போது நேற்றிரவு பிடிக்கப்பட்டானாம்.

முத்து.—ஹா! அப்படியா?

மோகன.—ஆனால் அவன் திரும்பவும் கைதியாகவா இருக்கிறான்?

குரு.—இப்போது கைதியாகவில்லை. அது தான் அதில் அதிசயம். போலீஸ்காரர்கள் அவனைப் பிடித்து ஒரு அறையிலிட்டுப் பூட்டிவிட்டு, அவனைச் சேர்ந்த மற்றவர்களைப் பிடிப்பதற்காகப் போனார்களாம். பிறகு திரும்பி வந்து பூட்டைத் திறந்து பார்த்தபோது, அவன் அவ்வறையி லில்லையாம். அவ்வறையிலிருந்து வெளியே போக வேறு வழியில்லையென்று போலீசார் அவ்வறை முழுவதையும் ஆராய்ந்து பார்த்துத் தெரிந்து கொண்டார்களாம்.

முத்து.—அப்படிச் சொல்லும். நான்தான் முன்னமே சொன்னேனே. அவன் யாதொரு பாவத்தையு மறியாத ஏழை. சூதுநாணயக்காரரைப் பிடிக்கச் சக்தியில்லாத போலீஸ்காரர்கள் அவ்வேழையைத் தொந்தரவு செய்கிறார்கள். முன்னொருமுறை பிடித்துத் தண்டித்ததை ஆதாரமாக வைத்துக்கொண்டு, அவன் அவ்விடத்துக்கே வராவிட்டாலும், அவனைப் பிடித்ததாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள் போலும்!

குரு.—அப்படியல்ல. அவனைத் தம் கண்ணால் பார்த்ததாக போலீஸ் இன்ஸ்பெக்டர் சுப்பராய முதலியார் சொன்னார். அதுவுமன்றி பலநாட்களாகப் போலீஸார் அவனைக் கவனித்துக்கொண் டிருக்கிறார்களாம். இப்போதும் அவனைப் பிடிப்பதற்கு ஒரு மார்க்கமிருக்கிறதாம்.

முத்து.—சரிதான். அவன் குற்றவாளி யென்று முன்னமே தீர்மானித்துத் தொடர்ந்தால், அவன் செய்வ தெல்லாம் குற்றமாகத் தான் தோன்றும். பாவம்! ஏழை துன்பப்படுகிறான்.

முத்துக்குமார பிள்ளையை வாதத்தில் வெல்லுவது சாத்தியமல்ல வென்பதை நன்றுயறிந்த குருநாதையா அப்பேச்சை அங்கு நிறுத்தி வேறேதோ வொரு விஷயத்தைப்பற்றிப் பேச ஆரம்பித்தார். மோகனசுந்தரி வாடிய முகத்துடன் அக்கூடத்தைவிட் டகன்று தோட்டத்துக்குட் சென்று புஷ்பச் செடிகளி



பின்னாலே வரும் பலாக்காயினும் முன்னாலே வரும் கலாக்காய் நலம்.

ளிடையே நடந்துகொண்டு தன் காதலனது துன்பத்தை நினைத்து வருந்திக்கொண்டிருந்தாள். சிறிது நேரம் சென்றபின் யாரோ தானிருக்கு மிடத்தை நோக்கி வரும் சப்தம் கேட்டு, அவள் திரும்பிப் பார்த்தாள். முத்துசாமி பிள்ளை மலர்ந்த முகத்துடன் விரைவாய் நடந்து வந்துகொண்டிருந்தார்.

சமீபத்தில் வந்ததும், அவர், "மோகனு! தனியேவந்து என்ன யோசித்துக்கொண்டிருக்கிருய்?" என்று அன்புடன் கேட்டார். மோகனசுந்தரியும் புன்னகையுடன், "யோசனை யென்ன? ஒன்றுமில்லை. கூடத்தில் மாமா தர்க்கத்துக்கு ஆரம்பித்தார் வழக்கம்போல். தலைவேதனையா யிருந்தது. அதற்காக இங்கே வந்தேன்" என்றாள். பிறகு இருவரும் பக்கத்திலிருந்த ஒரு பெஞ்சியின்மீது உட்கார்ந்து கொண்டார்கள்.

முத்துசாமி.—மோகனு! கலியாணத்தைச் சீக்கிரம் நடத்திவிட்டால், நலமாயிருக்குமே. உன் தகப்பனுர் உன்னிஷ்டப்படி நடத்தப் போவதாகச் சொல்லிவிட்டார். உன் இஷ்டமென்ன?

மோகனு.—என்னு லானவரையில் முயன்று பார்த்தேன். முடியவில்லை. என்ன செய்கிறது? தங்களைப் பர்த்தாவாகப் பெறும் தகைமை யுடையவளல்ல நான். தாங்கள் எவ்வளவோ பெருங்குணமுடையவர். உங்களை யடையப் பெரும் பாக்கியம் செய்திருக்கவேண்டும். நானே மகாபாபி! துக்கத்துக்கே பிறந்தேன். தங்களிடத்தில் எனக்குச் சிறிதும் காதல் என்பதில்லை. ஆதலால் தங்களை நான் மணஞ் செய்துகொள்வது தகுதியன்று. இதுவரையில் இவ்விஷயத்தைச் சொல்லாமலிருந்தது பெரிய தவறு. அதற்காக அடியேனைத் தயவு செய்து மன்னிக்கவேணும்.

முத்துசாமி.—மோகனு! அப்படியெல்லாம் சொல்லாதே! அன்று அப் பைத்தியக்காரன் வந்து நமது விவாகத்தைத் தடுத்ததுமுதல் உன் மனம் நொந்துபோய் நீ துயரத்திலேயே அழுந்தியிருக்கிருய். அழகும் புத்தியும் குணமும் நிறையப்பெற்ற உன்னை மணஞ் செய்துகொள்ள நானல்லவோ பெருந்தவம் செய்திருக்கவேண்டும். உனதன்பிற் சிறிதளவு எனக்குக் கிடைத்தாற் போதுமே. விவாகத்துக்கு நான் அவசரப்படவில்லை. எவ்வளவு காலம் வேண்டுமானுலும் காத்துக்கொண்டிருக்கிறேன்.

மோகனு.—எவ்வளவு காலம் காத்திருந்தாலும் பிரயோசனமில்லை யென்று நினைக்கிறேன். அன்று முதல் நானும் என் புத்திக் கெட்டியவரையில் யோசித்துப் பார்த்துவிட்டேன். நாம் விவாகஞ்செய்து கொண்டால், துக்கந்தான் விளையும்.

முத்துசாமி.—மோகனு! நீ பேசுவதைக் கேட்கும்போது, ஒரு துரோகி வஞ்சனையாக உன் மனத்தைக் கவர்ந்து என் வாணுளை வீணுக்கிவிட்டான் என எண்ணவேண்டியிருக்கிறது. அது உண்மைதானே?

மோகனு.—ஆம்.

முத்துசாமி.—அவன் யாவனென்று சொல்!

மோகனு.—சொல்வதிற் பயனென்ன?

முத்துசாமி.—இரண்டு வருஷகாலமாக என் மனத்தில் ஆசையை வளர்த்துவந்த நீ இக் கேள்விக்குப் பதிற் சொல்லாதிருப்பது தகுதியன்று.

மோகனு.—உண்மைதான். ஆனுல்நான் காதலிப்பவன் பெயரைச்சொன்னுல், தாங்கள் இப்பொழுதைக் காட்டிலும் அதிகமாக என்னை இகழ்வீர்கள். ஆயினும் தங்கள் இஷ்டத்துக்கு விரோதமாக நடக்க மனமில்லை. சூதுநாணயஞ் செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்ட துரைசாமி பிள்ளையே நான் காதலிப்பவன்!

முத்துசாமி பிள்ளை சிறிதுநேரம் திகைத்து நின்றார். மோகனசுந்தரி அம்மணிதனைக் காதலிப்பாளென்று அவர் கனவிலும் நினைக்கவில்லை யாதலால் அவர் ஆச்சரியம் கரைகடந்தது. பிறகு அவர் பெருங்கோபத்துடன், "துரைசாமி பிள்ளையையா? சூதுநாணயஞ் செய்யும் அயோக்கியனையா? என்னைவிட அவனையா நீ பெரிதாக மதித்தாய்? இப்போது இன்னொரு முறை அவன் போலீஸ்காரர் கையில் அகப்பட்டுக்கொண்டுவிட்டானே, அது தெரியுமா உனக்கு?" என்றார்.

மோகனசுந்தரி அமைதியுடன், "தெரியும். உலகமெல்லாம் சேர்ந்து அவன் குற்றவாளி யென்று சொன்னுலும் எனக்கு அவனிடத்திலுள்ள காதல் சிறிதும் குன்றுது. உலகத்தாரால் துறக்கப்பட்டால் மெய்யன்புடையவர் துறப்பாரோ? அவன் அயோக்கியனு யிருந்தாலும் சரி, குணக்குன்று யிருந்தாலும் சரி,

பின்னை என்பதும் பேசாதிருப்பதும், இல்லையென்பதற்கு அடையாளம்.

அவனே என்னால் முதன்முதலில் பார்த்தாவாக வரிக்கப்பட்டவன். அன்றியும், அவன் இந்த க்ஷணத்தில் என்முன் தோன்றி, நான் குற்றவாளியல்ல வென்று சொல்லுவானே யாகில், அவன் வார்த்தையை வேதவாக்கிய மாக நம்புவேன்!" என்று கூறினாள்.

அவள் அவ்வாறு சொல்லி வாய்மூடுமுன் அவர்கள்நின்ற விடத்துக்குச் சமீபத்திலுள்ள ஓர்புதரின் மறைவிலிருந்து துரைசாமி பிள்ளை ஓடிவந்து அவள்முன் நின்று, "மோகனா! நீ சொன்னதையெல்லாம் கேட்டுக் களித்தேன். நான் யாதொரு குற்றமும் செய்யவில்லை. இது சத்தியம்!" என்றான். க்ஷணநேரம் மோகனசுந்தரி தியங்கினாள். மறுநிமிஷத்தில் அவள் ஒரேபாய்ச்சலாய்ப் பாய்ந்து துரைசாமி பிள்ளையை இறுகவணைத்துத் தேம்பித்தேம்பி யழுதாள்.

முத்துசாமிபிள்ளை உக்கிரமான கோபத்துடன், "குற்றஞ் செய்யவில்லையா? நியாயசபையிற்போய்ச் சீக்கிரத்தில் சொல்லலாம்" என்று சொல்லிப் பற்களை நெறுநெறெனக் கடித்து, "அடே! முனிசாமி! கண்ணா! ஓடிவாருங்கள்! திருடன்! திருடன்!" என்று உரக்க கூவினார்.

அப்போதுதான் மோகனசுந்தரிக்கும் துரைசாமிபிள்ளைக்கும் ஜடவுலக ஞாபகம் திரும்பி வந்தது. உடனே மோகனசுந்தரி, "கண்ணே! துரைசாமி! ஓடு! ஓடு! ஆபத்து வந்துவிட்டது!" என்று கூவினாள். துரைசாமி பிள்ளை ஓட ஆரம்பித்தார். முத்துசாமிபிள்ளை அவர் கால்களைத் தடுக்கிவிட்டு அவரைக்கீழே வீழ்த்தினார். அவர் திரும்ப எழுந்திருக்குமுன், தோட்டக்கார முனிசாமி, கண்ணன், வண்டிக்காரன், இரண்டு வேலைக்காரப் பையன்கள் இவர்கள் ஓடிவந்து துரைசாமி பிள்ளையைப் பிடித்துக்கொண்டார்கள்.

தோட்டத்திற் பெருங்கூச்சல் கேட்டு ஓடிவந்த முத்துக்குமாரபிள்ளை முத்துசாமிபிள்ளையை என்ன விசேஷ மென்று கேட்டார். முத்துசாமிபிள்ளை, "விசேஷமா? அதோ நிற்கிறான் பாருங்கள் சூதுநாணயக்காரப்பயல்! பட்டப்பகலில் தாராளமாய்த் தோட்டத்துக்குள் உலாவுகிறான். முனிசாமி! அவனை இறுகப்பிடித்துக் கொள்ளுங்கள். அவனைப் பிடித்துக் கொடுப்பவருக்குப் போலீசார் இருநூறு ரூபாய் இனம் கொடுப்பார்கள்" என்றார்.

மோகனசுந்தரி, "அடே முனிசாமி! நான் அல்லவா இந்த வீட்டுக்கு யஜமானி? என் பேச்சைக் கேள்! அவரை விட்டுவிடு!" என்றாள்.

அப்போது முத்துக்குமாரபிள்ளை முத்துசாமிபிள்ளையை நோக்கி, "பிள்ளையவாளே! இவன் சூதுநாணயக்காரன்தான் என்று உமக்கு நிச்சயமாய்த் தெரியுமோ? அவனுடைய கந்தல் வேஷ்டியையும் சொக்காயையும் பார்த்தால், இரும்பையும் தகரத்தையும் போட்டுப்பொன் சவரனுக்குகிற சூதுநாணயக்காரனைத் தோன்றவில்லையே" என்றார். முத்துசாமிபிள்ளை, "தங்களுக்கு ஏன் அந்தச் சந்தேகம்? அவனையே கேட்டுப் பாருங்கள்" என்றார்.

முத்துக்குமார பிள்ளை துரைசாமி பிள்ளையை நோக்கி, "ஏன் அப்பா! உன்பெயரென்ன?" என்று கேட்டார். அவர்! "துரைசாமி பிள்ளை!" என்று பதிலளித்தார். பிறகு முத்துக்குமார பிள்ளை, "நீ சூதுநாணயக்காரனா?" என்று புன்னகையுடன் கேட்டார். அதற்குத் துரைசாமிபிள்ளை இல்லையென்று சொன்னார். அது கேட்டு முத்துக்குமாரபிள்ளை முத்துசாமி பிள்ளையைப் பார்த்தார். அவர், "நேற்றிரவு இவனைப் போலீஸார்கள் சூதுநாணயக்காரர் தொழிற்சாலையில் பிடித்ததுண்டா இல்லையா வென்று கேளுங்கள்" என்றார். முத்துக்குமார பிள்ளை அக்கேள்வியைக் கேட்டதும், துரைசாமிபிள்ளை "பிடித்ததுண்டு" என்று பதிலளித்தார்.

முத்துக்குமாரபிள்ளை முத்துசாமி பிள்ளையை நோக்கி, "பிள்ளையவாள்! போலீஸ்காரர் பிடித்ததனாலேயே அவன் குற்றஞ்செய்தவனாவானா? அவன்தான் தான் சூதுநாணயக்காரன் அல்லவென்று சொல்லுகிறானே. அவனை விட்டுவிடலாமென்று எனக்குத் தோன்றுகிறது. தங்கள் அபிப்பிராயமென்ன?" என்றார். உடனே முத்துசாமிபிள்ளை, "என்ன, பிள்ளையவாள்! சூதுநாணயஞ் செய்பவன் பேச்சை நம்பி அவனை விட்டுவிடுவது தகுதியா?" என்றார்.

"தாங்கள் சொல்வது உண்மைதான். அவன் சொன்னதெல்லாம் பொய்தான். அவன் துரைசாமி பிள்ளையுமல்ல, அவனைப் போலீசார் நேற்றுப் பிடித்துக் கொள்ளவு மில்லை.

புண்ணியத்துக்குக் கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டதுபோல.

ஆகையினால் அவன் நீர் சொல்லும் மனிதனாக இருக்கவே முடியாது. ஆகையினால் அவனை விட்டுவிடலாம்'' என்றார் முத்துக்குமார பிள்ளை.

முத்துசாமிபிள்ளைக்குக் கோபம் பொங்கிற்றேயெனினும் முத்துக்குமார பிள்ளையுடன் வாதாடி வெல்லுவது சாத்தியமல்லவென்று நன்றாயறிந்து, அவர் சாதுரியத்தைக் கண்டு மெச்சினவர் போல் நகைத்து, தோட்டக்காரனைநோக்கி, ''முனிசாமி! பிள்ளையவாள் இன்றைக்கெல்லாம் நகைக்க நகைக்கப் பேசுவார். எனக்குக் கொஞ்சம் அவசரவேலை யிருக்கிறபடியால், நான்சீக்கிரம் போகவேண்டும். ஆகையினால் விரைவாய்ச் சென்று போலீஸ்காரரை அழைத்துக்கொண்டு வா!'' என்றார். அப்போது மோகனசுந்தரி, ''அடே முனிசாமி! நீ இருக்குமிடத்தை விட்டு நகர்வாயேயாயின், அடுத்த நிமிஷத்தில் உன்னை நான் வேலையை விட்டு விலக்கிவிடுவேன். இது என் வீடு என்பதை எல்லாரும் மறந்துவிட்டீர்களோ?'' என்று கறுவினாள். அவ்வார்த்தைகளைக் கேட்டு எல்லோரும் யாதொரு பதிலும் சொல்ல முடியாமல் சும்மாவிருந்தனர். அப்போது முத்துக்குமாரபிள்ளை, ''மோகனா! நீ இவ்வாறு சொல்வது சரியல்ல. உன் வீட்டுக்குள் ஒரு கொள்ளைக்காரன் நுழைந்தால், அவனை ஒருவரும் பிடிக்கக்கூடாதோ உனக்கு இஷ்டமில்லாவிட்டால்? அப்படிப் பேசாதே! முத்துசாமி பிள்ளையவாள்! இந்த வைக்கோல் கொட்டகைக்குள் இவனை அடைத்துவைத்துவிட்டுப் பிறகு யாரையாவது போலீஸ்காரரை அழைத்துவர அனுப்பலாமென்று தோன்றுகிறது'' என்றார்.



முத்துசாமிபிள்ளை சொல்லியபடி போலீஸார் துரைசாமிப் பிள்ளையைப் பிடித்தல்.

அதுவரை துரைசாமி பிள்ளைக்கு அனுகூலமாய்ப் பேசிவந்த முத்துக்குமாரபிள்ளை திடீரென்று அவருக்கு விரோதமாய்ப் பேசவே, யாவரும் ஆச்சரியமடைந்தனர். மோகனசுந்தரி துயரத்தினால் கைகளைப் பிசைந்து நின்றாள். முத்துசாமிபிள்ளை தம் எண்ணம் இனி நிறைவேறுவது நிச்சயமென்று தைரியங்கொண்டு, ''அப்படியே செய்வோம். தங்களுக்கு எது உசிதமாய்த் தோன்றுகிறதோ அதையே செய்வோம்'' என்றார்.

''சரி! நானும் முனிசாமியும் இந்த ஆளைப் பிடித்துக் கொள்ளுகிறோம். தாங்களும், கண்ணனும், இந்தப் பயல்களுமாக இக் கொட்டகைக்குள்போய், அதிலிருந்து தப்பியோட வழியில்லையா வென்பதைத் தெரிந்து கொண்டு வாருங்கள்'' என்றார் முத்துக்குமாரபிள்ளை.

முத்துசாமிபிள்ளையும் வேலைக்காரர்களும் அக்கொட்டகைக்குள் நுழைந்தனர். முத்துக்குமார பிள்ளையும் முனிசாமியும் துரைசாமிபிள்ளையை அக்கொட்டகையின் வாசற்படிக்குப் பிடித்துக் கொண்டுபோனார்கள். இருந்தாற்போலிருந்து முத்துக்குமாரபிள்ளை, ''நீயும் உள்ளேபோய்ப் பார்!'' என்று சொல்லி, முனிசாமியைப் பிடித்துக் கொட்டகைக்குள் தள்ளி, அதன் கதவை மூடித் தாளிட்டுவிட்டு, துரைசாமி பிள்ளையின் காதில், ''நாளையதினம்

சாயங்காலம் ஏழுமணிக்கு எழும்பூர் இரயில் ஸ்டேஷனில் இரண்டாவது வகுப்புப் பிரயாணிகள் போகும் வழியண்டை நானிருக்கிறேன். என்னை வந்துபார். இப்போது உன்னால் எவ்வளவு விரைவாய் ஓடமுடியுமோ அவ்வளவு விரைவாய் ஓடிப்போ!" என்று சொன்னார். துரைசாமி பிள்ளை மான்போற் பாய்ந்து அதிவிரைவாய் ஓடினார். மோகன சுந்தரி தன் மாமனைக் கட்டி முத்தமிட்டாள். அவர், "கண்ணே! பயப்படாதே! உன் காதலனுடன் உன்னை எப்படியாயினும் சேர்த்து வைக்கிறேன்" என்று கூறினார்.

கொட்டகைக்குள் அடைபட்டவர்கள் அதன் கதவை மடமடவென்று இடித்துப் பெருங்கூச்சல் போட்டார்கள். முத்துக்குமார பிள்ளை அவர்களைச் சிறிதும் இலக்ஷியஞ் செய்யாமல் மோகனசுந்தரியை யழைத்துக் கொண்டு அவ்விடத்தைவிட் டகன்றார்.

---

# ராஜஸிம்ஹன்

## RAJASIMHAN

(184-ம் பக்கத் தொடர்ச்சி.)

### எட்டாம் அத்தியாயம்

### ரஜபுத்திரர் ஆலோசனை

இப்படி அநேகவிதமாய்த் தர்க்கமாயிற்று. கடைசியில் எல்லோரும் ராணா சொன்ன வார்த்தையே சரி யென்று ஒப்புக்கொண்டார்கள். உடன்படிக்கை செய்துகொள்வது என்று தீர்மானமாயிற்று.

பிறகு சபையில் ஒருவன், "அவுரங்கசீபு உடன்படிக்கைக்காகத் தூதனை நம்மிடத்துக்கு அனுப்பவில்லை. உடன்படிக்கை செய்து கொள்ளவேண்டுவது அவனுக்கு முக்கியமோ நமக்கோ?" என்று கேட்டான்.

அதற்கு ராஜஸிம்ஹன், "தூதன் வருவது எப்படி? இந்தக் கணவாய் வழியாய் வெளியே ஒரு பூச்சிகூட வரமுடியாமல் மூடியிருக்கிறது. தூதன் எப்படி வருவான்?" என்றான்.

தயாளுஷா.—அப்படியானால் நம்முடைய தூதன் எப்படி அங்கே போவான்? முன் தடவை நம்முடைய தூதன் போயிருந்தபொழுது அவனைக் கொல்லும்படி உத்தரவு செய்யவில்லையா? இப்போதும் அப்படிச் செய்யமாட்டானென்று எப்படித் தெரியும்?

ராஜஸிம்.—இந்தத் தடவை அப்படிச் செய்யமாட்டான் என்பது நிச்சயம். இப்போது அவனுக்கு பொய் உடன்படிக்கையாவது செய்துகொள்ளவேண்டுவது அவசியம். ஆனால் தூதன் எப்படிப்போகிறது என்பதுமாத்திரம் சந்தேகம். அது யோசிக்கவேண்டுவதுதான்.

அப்பொழுது மாணிக்கலாலன், "அந்தப் பாரம் என்மேலிருக்கட்டும். நான் மகாராணாவின் காகிதத்தை அவுரங்கசீபுக்குச் சேர்ப்பித்து அவனிடமிருந்து பதில் வாங்கிக்கொண்டு வருகிறேன்" என்றான்.

மாணிக்கலாலன் தந்திரத்திலும் சாமர்த்தியத்திலும் நிகரற்றவனென்று எல்லோருக்கும் தெரிந்திருந்தபடியால் எல்லோரும் அவன் வார்த்தையை நம்பினார்கள். தயாளுஷா காகிதம் எழுதினான். அதன் சாரமென்னவென்றால்:—பாதுஷா மீவாரிலிருந்து புறப்பட்டுச் சேனையை யெல்லாம் கொண்டுபோய் விடவேண்டும். மீவாரில் பசுஹத்தி நடக்கக் கூடாது. தேவாலயங்களை இடிக்கக்கூடாது. ஜாஸியா வரி வாங்கக்கூடாது. அப்படியானால் ராஜஸிம்ஹன் மார்க்கத்தைத் திறந்துவிடுவான். பாதுஷா பயமில்லாமல் போகலாமென்ற தாற்பரியம். காகிதத்தைச் சபையிலுள்ளவர்களெல்லோருக்கும் வாசித்துக் காண்பித்தாயிற்று. கேட்டு மாணிக்கலாலன், "பாதுஷாவின் பெண்சாதியும் மகளும் நம்மிடத்தில் கைதிகளா யிருக்கிறார்களே. அவர்கள் இருக்க வேண்டுமோ?" என்று கேட்டான்.

இது கேட்டவுடன் ஒருவர் இரண்டுபேர்கள் ஒன்றொன்று பரிகாசமாய்ச் சொல்ல வாரம்பித்தார்கள். ஆனால் எல்லோரும் விடக்கூடாதென்றார்கள். சிலர், "இருக்கட்டும். அவர்களை டாக்காவுக்கு அனுப்பவேணும். அங்கே ஹிந்துவாகி வைஷ்ணவ வேஷந் தரித்து ஹரிநாம கீர்த்தனம் செய்யட்டும்" என்றான். ஒருவன், "அவர்கள் விடுதலைக்காக பாதுஷா கோடிரூபாய் கொடுக்கட்டும்" என்றான். இப்படி நானாவித

மாய்ச் சொல்லத் தொடங்கினர்கள். மகாராணு ராஜஷிம்ஹன், "இரண்டு முஸல்மான் கைதிகளுக்காக உடன்படிக்கையை விட்டுவிடுகிறது சரியல்ல" என்றான். அவர்கள் இரண்டுபேர்களேயும் பிந்தி அனுப்பிவிட வேண்டுமென்று உத்தரவு செய்தான்.

அதேப்பிரகாரம் எழுதப்பட்டது. காகிதத்தை மாணிக்கலாலன் வசம் கொடுத்தார்கள். சபை கலேந்தது.

### ஒன்பதாம் அத்தியாயம்

### மபாரகனுக்கு வெகுமானம்

சபை கலேந்தபோதிலும் மாணிக்கலாலன் போகவில்லை. எல்லோரும் புறப்பட்டுப்போன பிறகு ஏகாந்தமாய் மகாராணுவினிடம்போய், "மபாரகனுக்கு வெகுமான விஷயமாய் தங்களுக்கு விக்ஞாபனஞ் செய்துகொள்ளுவதற்காக நின்றேன்" என்றான்.

ராஜஷிம்.—அவன் என்ன கேட்கிறான்?

மாணிக்க.—நம்மிடத்தில் கைதியாயிருக்கிற பாதுஷாவின் மகளேக் கேட்கிறான்.

ராஜஷிம்.—அவளேப் பாதுஷாவின் பின்னே அனுப்பாமலிருந்தால் சமாதானமாகாதென்று தோன்றுகிறது. அதுவுமல்லாமல் ஸ்திரீயை நாம்எப்படி நிர்ப்பந்தப்படுத்துகிறது?

மாணிக்க.—அவளுக்கு ஒரு தொந்தரவும் கொடுக்கவேண்டியதில்லை. மபாரகனுக்கும் அவளுக்கும் நேற்று இராத்திரி விவாகமாயிற்று.

ராஜஷிம்.—ஷஹஜாதை பாதுஷாவுக்கு அப்படிச் சொல்லிவிட்டால் எல்லாம் சரியாகிறது.

மாணிக்க.—இரண்டு பேர்கள் தலேகளும் நிற்கா.

ராஜஷிம்.—எதற்காக?

மாணிக்க.—ஷஹஜாதைகள் பாதுஷா வம்சத்தில் பிறந்தவர்களேத் தவிர வேறு புருஷரைக் கலியாணஞ் செய்துகொள்ளக்கூடாது. இந்த ஷஹஜாதை ஒரு ஸைனிகனேக் கலியாணம் செய்துகொண்டது பாதுஷாவுக்கு அவமானத்துக்கிடமாகும். அதுவுமன்றி பாதுஷாவுக்குத் தெரியாமல் கலியாணஞ்செய்துகொண்டதால், டில்லி ரங்கமகல் வழக்கப்பிரகாரம் விஷம் கொடுத்துக் கொல்லும்படி உத்தரவாகும். மபாரகன் ஸர்ப்ப விஷத்தினுல் சாகாதிருப்பதால் யானேயின் காலால் இடறியாவது கழுவிலேற்றியாவது கொலேசெய்வார்கள். இந்தக் குற்றத்துக்காக மன்னித்துவிட்டாலும், சமூகத்துக்கு அவன் செய்த உபகாரத்திற்காகவாவது கழுவி லேற்றுவார்கள். அது தெரியாமலிருந்தாலும் பாதுஷாவின் அனுமதியில்லாமல் விவாகஞ்செய்துகொண்டதற்காகக் கழுவுக்கிறையாவான் என்பதற்குச் சந்தேகமில்லை.

ராஜஷிம்.—நான் இதற்கு ஏதாவது அநுகூலம் செய்யமுடியுமா?

மாணிக்க.—அவுரங்கஸீபு தன் மகள் மருமகன் இவர்களுடைய குற்றத்தை மன்னிக்காவிட்டால், தாங்கள் உடன்படிக்கைக்கு ஒப்புக்கொள்வதில்லை என்று சொல்லலாம்.

ராஜஷிம்ஹன், "நான் அப்படியே சொல்லுகிறேன். அதற்காகப் பாதுஷாவுக்கு வேறொரு கடிதம் எழுதுகிறேன். அதையும் இந்தக் கடிதத்துடன் கொண்டுபோ. அவுரங்கஸீபு மகளின் குற்றத்தை மன்னிப்பான். ஆனல் மபாரகனின் குற்றத்தை மன்னிப்பதாக ஒப்புக்கொண்டாலும் அந்தப்படி நடப்பானே என்பது சந்தேகம். எப்படியாவது மபாரகன் இதனுல் சந்தோஷப்படும்படி செய்யத் தயாராயிருக்கிறேன்" என்று சொல்லி ராஜஷிம்ஹன் தன்கையால் வேறொரு கடிதமெழுதி மாணிக்கலாலன் வசம் கொடுத்தான். மாணிக்கலாலன் அந்த இரண்டு காகிதங்களேயும் எடுத்துக்கொண்டு அன்று இராத்திரியே உதயபுரம் புறப்பட்டுப் போனன். உதயபுரம் போய் முதலில் இந்த விருத்தாந்தங்களே யெல்லாம் நிர்மலேக்குத் தெரிவித்தான். நிர்மலேக்கு வெகு சந்தோஷமாயிற்று. அவள் பாதுஷாவுக்கு வேறொரு காகிதம் எழுதிக்கொடுத்தாள். எப்படியென்றால்,

"ஷஹான்ஷா!

தாஸியின் அநேகாநேக வந்தனங்கள்! தங்கள் உத்தரவுப்பிரகாரம் நடத்தி முடித்திருக்கிறேன். இப்போது ஹுஜூரின் சம்மதியாகவேண்டியது ஒன்றுதான் பாக்கி. நான் கடைசியில் தங்களேக் கேட்டுக்கொண்டதை ஞாபகம் வைத்துக்கொள்ளவேண்டும். உடன்படிக்கை செய்துவிடுகிறேன்."

இப்படி எழுதிக் காகிதத்தை மாணிக்கலாலனிடம் கொடுத்தாள், பிறகு அவள் இந்த விருத்தாந்தத்தை யெல்லாம் ஜேபஉன்னீஸா

வுக்குத் தெரிவித்தாள். அவளும் சந்தோஷப்பட்டாள்.

மாணிக்கலாலன் நடந்ததையெல்லாம் மபாரகனுக்குச் சொன்னான். மபாரகன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. மாணிக்கலாலன் மபாரகனுக்குஜாக்கிரதையுண்டாக்குவதற்காக, "ஸாகேப்! பாதுஷாவினிடம் திரும்பிப்போனால் அவன் உம்மை மன்னிப்பான் என்று நான் நம்பவில்லை" என்று சொன்னான்.

மபாரகன்.—நம்பிக்கை வேண்டாம்.

மறுநாட் காலமே நிர்மலகுமாரியினிடத்திலிருந்து புறாவை வாங்கிக் காகிதங்களைச் சிறிதாய் மடித்து அதன் காலில் கட்டி விட்டுவிட்டான். அது உடனே ஆகாயமார்க்கமாய்ப் பறந்தது. காலில்கட்டியிருந்தது கொஞ்சம் கனமாயிருந்தது. ஆனால் கடைசியில் அவுரங்கசீபினிடம் போய்ச் சேர்ந்தது. அவுரங்கசீபு உயரவே பார்த்துக்கொண்டிருந்தான். அங்கே போய்க் கீழே இறங்கிக் காகிதங்களைச் சேர்ப்பித்தது.

## பத்தாம் அத்தியாயம்
## உதயபுரியின் சர்வபங்கம்

புறா சீக்கிரம் அவுரங்கசீபின் பதில் காகிதம் கொண்டுவந்தது. ராஜஸிம்ஹன் என்னென்ன கேட்டிருந்தானோ அதற்கெல்லாம் அவுரங்கசீபு ஒப்புக்கொண்டான். ஆனால் சஞ்சல குமாரியை மாத்திரம் விட்டுக் கொடுக்க வேண்டுமென்று கேட்டான். ராஜஸிம்ஹன் அதைக்காட்டிலும் தங்களை ஸைனியத்துடன் இங்கேயே கோரி செய்துவிடுவது என் அபிப்பிராயமென்று சொன்னான். இது கேட்டு அவுரங்கசீபு அந்த ஆசையை விட்டுவிட்டான். அவுரங்கசீபு உடன்படிக்கைக்கு ஒப்புக்கொண்டு முன்ஷியினால் ஸந்திபத்திரம் எழுதுவித்து தன்முத்திரை வைத்துத் தன்கையினால் "முத்திரை வைத்திருக்கிறேன்" என்று எழுதிக்கொடுத்தான். ஜேபஉன்னீஸா, மபாரகன் இவர்கள் விஷயமாயும் மன்னிப்பதாக வேறொரு காகிதமெழுதி யனுப்பினான். ஆனால் அந்த விவாகத்தைப்பற்றி ஒருவரும் சொல்லாமலிருக்கவேண்டுமென்று கருராய் எழுதியிருந்தான். மகள் புருஷனைப் பார்ப்பதற்கு வேறே உபாயம் செய்வதாகவும் எழுதியிருந்தான்.

ராஜஸிம்ஹன் உடன்படிக்கைப் பத்திரத்தைப் பெற்றுக்கொண்டு மொகலாய சேனையை விட்டுவிடும்படி கட்டளையிட்டான். ரஜபுத்திரர் அநேக யானைகளைக் கொண்டுவந்து மரங்களை இழுத்தெறிந்தார்கள். மொகலாயருக்கு உடனே ஆகாரத்துக்கு வேண்டிய சாமான்கள் கிடைக்காதாகையால் ராஜஸிம்ஹன் தயவுசெய்து அநேக யானைகளின்மேல் சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான்களை யனுப்புவித்தான். கடைசியில் உதயபுரத்திலிருந்த ஜேபஉன்னீஸா, உதயபுரி, மபாரகன் இவர்களையும் விட்டுவிடும்படி உதயபுரத்திற்குச் சொல்லியனுப்பினான். அப்பொழுது நிர்மலை சஞ்சலையைக் குறித்துக் கண்காட்டி, "பேகம் உனக்குத் தாவியாக வேலைசெய்து கொடுத்தாளோ?" என்று மெதுவாய்க் காதோடு சொன்னாள். அதுகேட்டுச் சஞ்சலை உதயபுரியைப் பார்த்து, "நான் தங்களை டில்லியிலிருந்துவந்து செய்யவேண்டுமென்று சொல்லியிருந்த காரியம் செய்யவேண்டுமே" என்றாள்.

உதயபுரி, "நான் உன் நாக்கையறுத்துத் துண்டு துண்டாக்கிப் போடுவேன். நான் உனக்கு தாம்பூலம் மடித்துக்கொடுக்கும்படி நீ எம்மாத்திரம்? பாதுஷாவின் பேகத்தைக் கைதியாக வைத்துக்கொள்வதற்கு அற்பாகிய உங்களால் முடியுமா? இந்தமாதிரி அவமானம் செய்வதற்குத் தகுந்த சிக்ஷை உனக்குச் சீக்கிரத்தில் கிடைக்கும். உதயபுரமென்கிற பெயரே இல்லாமல் செய்துவிடுகிறேன்" என்றாள்.

அப்பொழுது சஞ்சலகுமாரி உறுதியாய், "மகாராணா அவர்கள் தயவுசெய்து பாதுஷாவை விடுதலைசெய்து உம்மையும் விடும்படி உத்தரவு செய்தாரென்று கேள்விப்பட்டேன். அதற்கு ஒரு நல்ல வார்த்தை சொல்ல உமக்குத் தெரியாமற்போயிற்று. அதனால் உம்மை விடுகிறதில்லை. நீங்கள் வேலைக்காரிகளிருக்கிற இடத்துக்குப் போய்த் தாம்பூலம் தயார்செய்து எனக்குக் கொண்டுவந்து கொடுக்கவேண்டும்" என்றாள்.

ஜேபஉன்னீஸா, "மகாராணி! அதென்ன, தாங்கள் இவ்வளவு நிர்த்தயவா யிருக்கும்படியாயிற்று?" என்றாள்.

சஞ்சல.—நீங்கள் மாத்திரம் போகலாம். நீங்கள் போகிறதற்குத் தடையில்லை. இவளை நான் விடமாட்டேன்.

ஜேப உன்னீஸா புத்தி சொன்னதின்மேல் உதயபுரி வணக்கத்துடன் நின்றாள்.

2-18



ஆனல் சஞ்சலகுமாரி, "நீ ஒருதடவை எனக்கு வெற்றிலை மடித்துக் கொடுத்துவிட்டுப் பிற்பாடு புறப்பட்டுப் போகலாம்" என்ருள்.

உதயபுரி, "எனக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுக்கத் தெரியாதே" என்ருள்.

சஞ்சலை, "வேலைக்காரி சொல்லித் தருவாள்" என்ருள்.

வேறு வழியில்லாமல் உதயபுரி ஒப்புக் கொண்டாள். வேலைக்காரிகள் சொல்லிக் கொடுத்த பிரகாரம் சஞ்சலகுமாரிக்குத் தாம்பூலம் தயார்செய்துகொடுத்தாள்.

அப்பொழுது சஞ்சலகுமாரி ஸலாம்செய்து அனுமதிகொடுத்து, "இங்கென்னென்ன நடந்ததோ அதையெல்லாம் பாதுஷாவுக்குச் சொல்லவேண்டும். அன்றியும் நானே படத்தைக் காலால் உடைத்தவளென்று சொல்லுவதும் தவிர, இனிமேலும் அவன் ஹிந்துப்பெண்களை அவமானம் செய்ய வாரம்பித்தால் படத்தை மாத்திரம் உடைத்துத் திருப்தியடைவதில்லை என்று சொல்லுங்கள்" என்ருள்.

அப்பொழுது உதயபுரி கோபத்துடனும் துக்கத்துடனும் புறப்பட்டுப் போனுள். மகிஷியையும் பெண்ணையுமடைந்து அவுரங்கசீபு வெட்கத்துடன் ராஜஸிம்ஹன் ஸமுகத்திலிருந்து முதுகு காட்டிப் புறப்பட்டுப்போனுன்.

## பதினேராம் அத்தியாயம்
## விக்கிரமஸிம்ஹன் கடிதம்

பேகங்கள் அனுமதி வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தார்கள்; மொகலாயர் அபஜயப் பட்டார்கள்; பாதுஷாவின் மகிஷி சஞ்சலகுமாரிக்குத் தாஸியைப்போல் ஸேவித்தாள்; ஆனுலும் ராணு யாதொரு வார்த்தையும் சொல்லவில்லை. சஞ்சலகுமாரி அழுதுகொண்டிருந்ததைப் பார்த்து நிர்மலை வந்து அவள் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டாள். அவள் மனத்திலுள்ள எண்ணத்தை யறிந்துகொண்டு, "மகாராணுவுக்கு ஏன் ஞாபகப் படுத்தக் கூடாது? என்று கேட்டாள்.

சஞ்சலை.—நீ என்ன பைத்தியமா யிருக்கிருயே? பெண்ணுயிருந்துகொண்டு அடிக்கடி இப்பேர்ப்பட்ட வார்த்தை சொல்வதா?

நிர்மலை.—அப்படியானுல் உன் தகப்பனுர் வரும்படி ரூபநகரத்துக்கு ஒரு கடிதம் எழுதப்படாதோ?

சஞ்சலை.—எதற்காக? அந்தக் காகிதத்திற்கு அப்பேர்ப்பட்ட பதில் வந்தபிறகு மறுபடியும் காகிதம் எழுதுகிறதோ?

நிர்மலை.—தகப்பனுர் மேல் கோபித்துக் கொண்டிருக்கலாமா?

சஞ்சலை.—கோபம் ஒன்றுமில்லை. ஆனுல் ஒருதரம் எழுதி (அதுவும் நான் எழுதினது) சாபம் வாங்கிக்கொண்டேன். அதை நினைக்கிறபோதெல்லாம் இன்னும் வயிறு எரிகிறது? மறுபடியும் எழுதுவதற்குத் தைரிய முண்டாகுமோ?

நிர்மலை.—விவாக விஷயம் எழுத வேண்டாமே?

சஞ்சலை.—மற்றும் எதைப்பற்றி எழுதுகிறது?

நிர்மலை.—மகாராணு ஒரு வார்த்தையும் சொல்லாமலிருந்தால் தகப்பனுர் அரண்மனைக்குப்போய் இருப்பதுதான் நல்லது. அவுரங்கசீபு மறுபடியும் இந்தப் பக்கம் திரும்பிப்பார்க்க மாட்டான். அதனுல்தான் காகிதம் எழுத வேணு மென்கிறேன். தகப்பனுர்வீடு தவிர வேறென்ன உபாயம்?

சஞ்சலை ஏதோ பதில் சொல்ல வாரம்பித்தாள். ஆனுல் பதில் வாயைவிட்டு வெளியே வரவில்லை. சஞ்சலை அழுதுவிட்டாள். நிர்மலைக்கும் ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை.

சஞ்சலை கண்ணீரைத் துடைத்துக்கொண்டு லஜ்ஜையினுல் கொஞ்சம் சிரித்தாள். நிர்மலையும் நகைத்தாள். பிறகு நிர்மலை, "நான் டில்லி பாதுஷாவின் எதிரில்கூட பதில் சொல்லப் பயப்படவில்லை. உனக்கு எதிரில் பதில் சொல்லமுடியாமல் போயிற்று. இது டில்லி பாதுஷாவுக்குக் கௌரவக் குறைவாகிறது. இம்லீ பேகமுக்கும் கௌரவக் குறைவாகிறது. ஆனுல் இன்னெரு தரம் இம்லீபேகத்தின் முன்ஷி சக்தியைப் பரீக்ஷித்துப்பார். பேனு மைக்கூடு கொண்டுவந்து எழுதஆரம்பி. நான் சொல்லிக்கொண்டு போகிறேன் நீ எழுது" என்ருள்.

சஞ்சலை. யாருக்கு எழுதுகிறது? தாய்க்கோ தகப்பனுருக்கோ?

நிர்மலை.—தகப்பனுருக்கு.

சஞ்சலை எழுதினுள். நிர்மலை சொல்லிக் கொண்டு போனுள்:—"இங்கே மொகலாய பாதுஷா மகாராணு கையில்" என்ருள்.

"பாதுஷா" என்கிற வரையில் எழுதி, சஞ்சலை, "மகாராணுவின் கையில் என்று எழுதக் கூடாது; ராஜபுத்திரர்கையில் என்று எழுதுகிறேன்" என்ருள்.

நிர்மலை புன்சிரிப்புடன், "அப்படியே எழுது!" என்ருள். பிற்பாடு சஞ்சலை நிர்மலை சொன்ன பிரகாரம் எழுத ஆரம்பித்தாள்.

"கையில் அபஜயப்பட்டு ராஜஸ்தானத்திலிருந்து அடிபட்டுக்கொண்டுபோயிருக்கிருன். இனிமேல் அவன் நம்மேல் தன் பலத்தைக் காட்டமாட்டான். இப்பொழுது தங்கள் குமாரத்தி விஷயத்தில் தங்கள் உத்தரவு என்ன? நான் தங்களாதீனத்திலேயே இருக்கிறேன்?"

பிறகு நிர்மலை "மகாராணுவுக்கு ஆதீனமாக வில்லை என்று எழுது" என்ருள்.

சஞ்சலை "போ தூர!" என்று சொல்லி அந்த வார்த்தைகளை எழுதவில்லை. நிர்மலை, "அப்படியானல் வேறெவருடைய ஆதீனத்திலுமில்லை என்று எழுது" என்ருள். சஞ்சலை அப்படியே எழுதினள். இப்படிக் காகித மெழுதிமுடித்த பிற்பாடு நிர்மலை சொன்னபிரகாரம் ரூபநகரத்திற் கனுப்பினள். ரூபநகரத்தரசன் அக்காகிதத்துக்குப் பதில், "நான் இரண்டாயிரம் வீரர்களுடன் உதயபுரத்திற்கு வருகிறேன். ரஸ்தா மார்க்கமெல்லாம் அட்டியில்லாமல் விட்டிருக்கவேண்டுமென்று ராணுவுக்கு அறிவி!" என்று எழுதினன்.

இந்த ஆச்சரியகரமான காகிதத்தின் அர்த்தம் கண்டுபிடிக்க முடியாமல் சஞ்சலையும் நிர்மலையும் தர்க்கம் செய்து சேனையின் சமாசாரமாயிருப்பதால் ராணுவுக்கறிவிப்பது நல்லதென்று தீர்மானித்தார்கள். நிர்மலை மாணிக்கலாலனிடம் சொல்லியனுப்பினள்.

ராணு ராஜஸிம்ஹனும் யோசித்துக்கொண்டே இருந்தான். அவன் சஞ்சலகுமாரியை மறக்கவில்லை. அவனும் விக்கிரமஸிம்ஹனுக்குக் காகிதம் எழுதியிருந்தான். சஞ்சலகுமாரியின் விஷயமாய்த்தான் எழுதியிருந்தான். அதில் மகளுக்குச் சாபங் கொடுத்ததை ஞாபகத்துக்குக்கொண்டுவந்து, ராஜஸிம்ஹன் பாத்திரனென்று தெரிந்தால் தானே வந்து ஆசீர்வாதஞ்செய்து கன்னிகாதானம் செய்து கொடுப்பதாக எழுதியிருந்ததையும் எடுத்துச் சொல்லி, இப்பொழுது உம்முடைய அபிப்பிராயமென்னவென்று கேட்டு எழுதியனுப்பியிருந்தான்.

அதற்கும் பதில் விக்கிரமஸிம்ஹன், "நான் இரண்டாயிரம் குதிரை வீரர்களுடன் தம் மிடத்திற்கு வருகிறேன். மார்க்கம் விட்டிருக்க வேண்டும்" என்று எழுதியிருந்தான்.

ராஜஸிம்ஹனும் சஞ்சலகுமாரியைப் போலவே அர்த்தம் புரியாமல் விக்கிரமஸிம்ஹன் இரண்டாயிரம் பேர்களை அழைத்துக்கொண்டு வந்து என்னசெய்வான்? நாம் ஜாக்கிரதையாயிருக்கவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு விக்கிரமஸிம்மனுக்காக மார்க்கத்தையெல்லாம் விக்கினங்களில்லாமல் விட்டிருக்கும்படி உத்தரவுசெய்தான்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## பாதுஷா பேச்சுப்பிறழ்தல்

உதயஸாகரத்தின் கரையில் மறுபடியும் வந்து அவுரங்கசீபு தளமிறக்கினன். பொழுது விடிந்தது. சிப்பாய்களுக்கும் யானை குதிரை முதலான கால்நடைகளுக்கும் ஆகாரமாயிற்று. அப்பொழுது சிப்பாய்கள் பாடவும் ஆடவும் ஆரம்பித்தார்கள். ஒரு சிப்பாய், "ஹிந்து ராஜ்யத்திற்கு வந்ததால் ஏகாதசி உபவாஸம் செய்த மாதிரியாயிற்று" என்ருன். இதைக்கேட்டபோடினவர்களில் ஒருத்தி, "பிழைத்துவந்ததே பெரிதாயிற்று" என்ருள். ஒருவன், "நாமெல்லாம் சிப்பாய்கள் மரம்வெட்டுகிற வித்தை நமக்குத் தெரியாது. அதனல்தான் தோற்றுப்போனேம்" என்ருன். அதற்குப் பதில் மற்றொருவன் "உமக்கு வயலில் அறுப்பு அறுக்கத் தெரியுமே யொழிய மரம் வெட்டத்தெரியுமா என்ன?" என்ருன். இப்படியெல்லாம் ஒருவரோடொருவர் வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

இது இப்படியிருக்க, பாதுஷா தன் சேனையின் மத்தியிலுள்ள ரங்கமகலுள் பிரவேசித்தான். உடனே ஜேபஉன்னிஸா வந்து கை கூப்பிக்கொண்டு நின்ருள். "நீ செய்துகொண்ட விவாகம் நீ மனப்பூர்வமாய்ச் செய்துகொண்டதில்லை என்று தோன்றுகிறது. அதனல் உன்னை மன்னித்திருக்கிறேன். ஆனல் அந்த ஸமாசாரம் ஒருவருக்கும் தெரியாதபடி ஜாக்கிரதையா யிருக்கவேண்டும்" என்ருன். பிற்பாடு உதயபுரியைப்போய்ப் பார்த்தான். அவள்

27 புரட்டிப் புரட்டி உதைக்கிறபோதும், மீசையில் மண்படவில்லை யென்கிருன்.

தனக்கு நடந்த அவமானங்களை யெல்லாம் ஆதியோடந்தமாய் நடந்ததைப் பார்க்கிலும் பத்து மடங்கு அதிகமாய்ச் சொன்னதைக் கேட்டு, அவுரங்கசீபு அதிக விசனப்பட்டு கோபாக்கினியால் ஜ்வலித்துக் கொண்டிருந்தான்.

மறுநாள் தர்பாரில் உட்காருவதற்கு முன்னமே மபாரகனைத் தனியாய்க் கூப்பிட்டு, "உன் குற்றங்களையெல்லாம் மன்னித்துவிட்டேன். நீ எனக்கு மருமகனாய்விட்டாய். என் மருமகனாயிருந்து கீழ்ப் பதவியிலிருப்பது சரியல்ல வாதலால், உன்னை இரண்டாயிரம் சிப்பாய்களுக்கு ஸுபேதாராக நியமித்திருக்கிறேன். இன்றைக்கே உத்தரவாகும். ஆனால் நீ இப்பொழுதுஇங்கேயிருக்கக்கூடாது. ஏனென்றால், ஷஹஜாத் அக்பர் மலைகளின் மத்தியில் என்னைப்போல் கஷ்டத்தில் விழுந்திருக்கிறான். அவன் உதவிக்காக டிலீர் கான் போகப்போகிறான். அங்கே உன்னைப்போன்ற வீரர்களின் ஒத்தாசை வேண்டியிருப்பதால், நீ இன்றைக்கே புறப்பட்டுப் போகவேண்டும்" என்று கட்டளையிட்டான்.

மபாரகன் இதைக்கேட்டுச் சந்தோஷப்படவில்லை. அவுரங்கசீபின் ஆதரவான வார்த்தைகள் சீக்கிரத்தில் துன்பத்துக்குக் காரணமாகுமென்பது அவனுக்குத் தெரியும். இருந்தாலும் வருத்தத்தைக் காண்பிக்காமல் வெகு வணக்கத்துடன் பாதுஷாவின் அனுமதியைப் பெற்றுக்கொண்டு டிலீர் கான் இறங்கியிருந்தவிடத்துக்குப் போகிறதற்குப் பிரயத்தனப்பட்டுக்கொண்டிருந்தான்.

பிறகு அவுரங்சீபுடிலீர்கானுக்கு, "மபாரகனை இரண்டாயிரம் ஆளுக்கு ஸுபேதாராக நியமித்து உன்னிடமனுப்பியிருக்கிறேன். அவன் ஒருநாள் கூட பிராணனோடிருக்கப்படாது. யுத்தத்தில் செத்தால் நல்லதாயிற்று. இல்லாவிட்டால் வேறு எப்படியாவது சாகவேண்டும்" என்று ஒரு காகிதமெழுதி ஒரு நம்பிக்கையான வேலைக்காரன்வசம்கொடுத்தனுப்பினான்.

டிலீர் கானுக்கு மபாரகனைத் தெரியாது. பாதுஷாவின் ஆக்கினைப்பிரகாரம் செய்துவிட வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டான்.

பிற்பாடு தர்பாரில் உட்கார்ந்துகொண்டு அவுரங்கசீபு தன்னபிப்பிராயத்தை எல்லாருக்கும் தெரியும்படி சொன்னான். என்னவென்றால்:—நாம் விறகு வெட்டிகள் மோசத்திற்குள்பட்டு உடன்படிக்கைக்கு ஒப்புக்கொண்டோம். அப்படிப்பட்ட உடன்படிக்கைப் பிரகாரம் நடக்கவேண்டிய ஆவசியகமில்லை. அற்பஞ்சிய ஒரு ராஜாவுடன் பாதுஷாவாகிய நான் சமாதானம் செய்வதென்றுலென்ன? நான் உடன்படிக்கைப் பத்திரத்தை கிழித்தெறிந்துவிட்டேன். ஏனென்றால், அந்த ரூபநகரத்துப் பெண்ணை அவன் அனுப்பாததால் அப்படிச் செய்துவிட்டேன். ரூபநகரத்துப் பெண்ணை அவள் தகப்பன் நம்மிடத்துக் கனுப்பிவிட்டதால் ராஜஸிம்ஹனுக்கு அவள் பேரில் அதிகாரமில்லை. அவளை அனுப்பினாலொழிய நாம் ராஜஸிம்ஹனது குற்றத்தை மன்னிக்கமாட்டோம். அதனால் யுத்தம் எப்படி நடந்துகொண்டிருந்ததோ அப்படியே நடக்கட்டும். ராணாவின் ராஜ்யத்தில் பசுக்களைக் கண்டவிடத்திலெல்லாம் மூஸல்மானர் கொன்றுவிட வேண்டும். தேவாலயங்களை இடிக்கவேண்டும். ஜாஸியா வரியை எங்கும் வசூல் செய்யவேண்டும். இவ்வாறு அவுரங்கசீபு கட்டளையிட்டான்.

மேலே சொன்ன உத்தரவுகளெல்லாம் உடனே அனுஷ்டானத்திற்கு வந்தன. இது இப்படியிருக்க, டிலீர்கான் தைஸூர் மார்க்கமாய் மார்வாரிலிருந்து உதயபுரத்திற்கு வந்துகொண்டிருந்தான். இதுகேட்டு ராஜஸிம்ஹன் உடன்படிக்கையான பிறகு மறுபடியும் யுத்தம் எதற்காக என்று அறிந்துகொண்டு வருவதற்காகத் தூதர்களை அவுரங்கசீபினிடம் அனுப்பினான். அதற்கவன், "விறகு வெட்டுகிற காட்டாள்களுடன் பாதுஷாவுக்கு உடன்படிக்கை ஏற்படுமோ? ரூபநகரத்து ராஜகுமாரியை அனுப்பினாலொழியபாதுஷா ராஜஸிம்ஹனது குற்றத்தை மன்னிப்பதில்லை" என்று சொல்லியனுப்பினான்.

இதைக்கேட்டு ராஜஸிம்ஹன், "நான் இன்னும் ஜீவித்துக்கொண் டிருக்கிறேன்" என்றான். ரூபநகரத்து ராஜகுமாரியை அபகரித்துப்போனது அவுரங்கசீபின் மனத்தில் சூலம்போல் குத்திக்கொண்டிருந்தது. அவன் ராஜஸிம்ஹனிடத்தில் தன் காரியம் பலிக்காதென்று தெரிந்துகொண்டு, ரூபநகரத்து அரசனுக்கு, "உன்னுடைய மகள் இன்னும் என்னிடம் வந்து சேரவில்லை. அவளை உடனே

அழைத்துவரவேண்டும். இல்லாவிட்டால் ரூபநகரமென்கிற அடையாளமே இல்லாதபடி செய்துவிடுவேன்'' என்று ஒரு காகிதமெழுதி யனுப்பினுன். அவுரங்கசீபு ரூபநகரத்து ராஜகுமாரி தன் தகப்பன் பலவந்தம் செய்தால் வருவதற்குச் சம்மதிப்பாள் என்று நம்பிக்கொண்டிருந்தான். காகிதம் வந்து சேர்ந்தவுடன், விக்கிரமஸிம்ஹன், "நான் சீக்கிரமாய் இரண்டாயிரம் குதிரைவீரர்களுடன் தங்கள் ஹுஜூரில் வந்து ஹாஜராகிறேன்'' என்று பதில் எழுதியனுப்பினுன்.

அவுரங்கசீபு, "சேனை எதற்காக இருக்கலாம்?- அநேகமாய் எனக்கு ஒத்தாசை செய்வதற்காகத்தா னிருக்கலாம்'' என்று நினைத்துக் கொண்டான்.

பதின்மூன்ரும் அத்தியாயம்

தரியாவின் வருகை

அழகின் மகிமை எப்பேர்ப்பட்டதென்று வருணிப்பது எளிதல்ல. மபாரகன் ஜேபஉன்னீஸாவை மறுபடியும் பார்த்து எல்லாவற்றையும் மறந்துவிட்டான். ஜேப உன்னீஸா இப்போது வணக்கத்தோடும், கர்வமில்லாமலும், பிரீதியோடும் கண்களில் நீருடனிருந்தாள். மபாரகன் முன்னே அவளிடத்தில் வைத்திருந்த பிரீதியெல்லாம் மறுபடியும் அவன் இதயத்திற் பெருகிற்று. தரியாவை மறந்துவிட்டான். மனிதன் ஸ்திரீ ஜாதியின் ஆசையினுல் அந்தகனுனல் தருமாதரும ஞானம் உண்டாவதில்லை.

ஆயிரக்கணக்கான தீபங்களின் காந்தியின் பிரதிபிம்பத்தால் விளங்குகின்ற உதயசாகரத்தின் நாலு பக்கங்களிலும் சுற்றிக்கொண்டிருந்த மலைகளைப் பார்த்துக்கொண்டு கூடார மண்டபத்தின் மத்தியிலுள்ள இந்திர சபைக்குச் சமானமான ஒரு அறையிலுட்கார்ந்து கொண்டு மபாரகன் ஜேபஉன்னீஸாவின் கையைத் தன் கைக்குள் வைத்துக்கொண்டான். மபாரகன், "வெகு துக்கத்துடன் உன்னை மறுபடியு மடைந்தேன். ஆனுல் இந்த சுகத்தை இன்னும் பத்து தினங்கள் கூட அனுபவிக்கப் போகிறதில்லை '' என்று சொன்னுன்.

ஜேப உன்னீ.—எதற்காக? உன்னைத் தடுக்கிறவர் யார்! பாதுஷாவா?

மபாரக.—அது சந்தேகமாயிருக்கிறது. இப்போது பாதுஷாவின் வார்த்தையைப் பற்றிச் சொல்லப்படாது. நான் நாளைக்கு யுத்தத்துக்குப் போகப்போகிறேன். யுத்தத்தில் மரண முண்டாகலாம். தப்பிப்பிழைப்பது முண்டு. ஆனுல் என்னைப்பற்றின வரையில் மரணமே நிச்சயம். ரஜபுத்திரர்கள் யுத்தத்திற்காகச் செய்திருக்கிற கிரமங்களையும் ஏற்பாட்டையும் பார்க்கும்பொழுது, இந்தப் பருவத யுத்தத்தில் நாம் நிச்சயமாய்த் தோற்றுப் போவோமென்று தோன்றுகிறது. நான் ஒருதரம் தோற்று வந்திருக்கிறேன். இன்னெருதடவை தோற்றுவரமாட்டேன். நான் யுத்தத்தில் சாகவே வேண்டும்.

ஜேப உன்னீஸா கண்ணீர்விட்டுக்கொண்டு, "ஈசுவரன் நீ யுத்தத்தில் ஜயமடையும்படி செய்வார். நீ மறுபடியும் வாராமலிருந்தால் நானும் பிராணனை விடுவேன்'' என்று சொன்னுள்.

இருவரும் கண்ணீர் விட்டார்கள். அப்பொழுது மபாரகன் சாகிறதோ இல்லையோ என்று யோசித்துக்கொண்டிருந்தான். எதிரில் மலைகளால் சூழப்பட்ட உதயசாகரத்தின் இருட்டுமயமான ஜலம். அதில் தீபங்களால் பிரகாசிக்கின்ற கூடாரங்களின் நிழல் இருட்டு. அந்த இரண்டுபேர்களும் அந்தகாரமான அந்த இருட்டைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இப்படி யிருக்கும்பொழுது பயத்துடன் ஜேப உன்னீஸா, "இந்த இருட்டில் அதோ சுவரண்டை யாரோ ஒளிந்து கொண்டிருக்கிறுர்போல் தோன்றுகிறது. உனக்காக என்மனம் எப்போதும் சந்தேகப் பட்டுக்கொண்டே யிருக்கிறது'' என்ருள்.

மபாகரன் என்னவென்று பார்த்துவருகிறேனென்று சொல்லிப்போய்ச் சுவரின்கீழ் பார்க்கவும், நிஜமாகவே யாரோ படுத்துக்கொண்டிருந்தார். மபாரகன் இருட்டில் படுத்திருந்தவரைக் கையைப்பிடித்து எழுப்பினுன். ஒளிந்துகொண்டிருந்தவர் எழுந்த பிறகு மபாரகன் பார்த்தான். இருட்டில் ஒன்றும் தெரியவில்லை. மபாரகன் அந்த மனுஷியாளை வேலைக்காரர் வசம் ஒப்புவித்துவிட்டு ஜேபஉன்னீஸாவினிடம் வந்துசொன்னுன். ஜேப உன்னீஸா, "அது யாரென்று பார்க்கவேண்டும். அந்தப் பேர்வழியை இங்கே அழைத்துவரவேண்டும்'' என்று சொன்னுள். மபாரகன் அழைத்து வந்தான்.

ஜேப உன்னிஸா.—நீ யார்? எதற்காக ஒளிந்துகொண்டிருந்தாய்? முகத்திலிருந்து வஸ்திரத்தை எடு.

அந்தப்பேர்வழி ஒருஸ்திரீ. முகவஸ்திரத்தை எடுத்தாள். இரண்டுபேர்களும் ஆச்சரியத்துடன் பார்க்கவும், தரியாவா யிருந்தாள்.

வெகு சந்தோஷமாயிருந்த சமயத்தில் திடீரென்று மேகமில்லாம லிருக்கும்பொழுது எதிரில் இடிவிழுந்தாற்போல் ஜேப உன்னீஸாவும் மபாரகனும் மதிமயங்கினார்கள். மூன்றுபேர்களும் ஒன்றும் பேசவில்லை.

வெகுநேர மானபிறகு மபாரகன் பெருமூச்சுவிட்டு, "ஐயோ! அல்லா! நான் சாகவே வேண்டும்" என்றான்.

ஜேப உன்னீஸா துக்கத்துடன், "நானோ?" என்றாள்

தரியா, "நீ யார்?"

மபாரகன் என்றான். அவனை, "என்னுடன் வா" என்றாள்.

அப்பொழுது மபாரகன் விசனத்துடன் ஜேப உன்னிஸாவினிடம் அனுமதி பெற்றுக்கொண்டு போனான்.

## பதிநான்காம் அத்தியாயம்

## விக்கிரமஸிம்ஹன் ராணாவைப்பணிதல்

ராஜஸிம்ஹன் ராஜநீதிகளிலும் யுத்தநீதிகளிலும் நிகரற்ற பண்டிதனாயிருந்தான். மொகலாய ஸைன்யம் தன் ராஜ்யத்தைவிட்டு வெகு தூரம் போகிறவரையில் தன் சேனையை நிறுத்திவைத்துக்கொண்டிருந்தான். அவன் கூடாரத்தில் இருக்கும்பொழுதே விக்கிரமஸிம்ஹன் இரண்டாயிரம் குதிரைவீரர்களுடன் வந்துசேர்ந் திருக்கிறானென்கிற வர்த்தமானம் கிடைத்தது. ராஜஸிம்ஹன் யுத்தத்துக்குத் தயார் செய்துகொண்டான்.

ஒரு குதிரைவீரன் தூதனென்று முன்பாக வந்து ராஜஸிம்ஹன் பேட்டி வேண்டிக்கொண்டான். சேவகர் அவனை உள்ளே யழைத்து வந்தார்கள். அவன் வந்து ராஜஸிம்ஹனுக்கு வந்தனம்செய்து ரூபநகரத்ததிபதி விக்கிரமஸிம்ஹன் பேட்டிக்கு ஸைன்யத்துடன் வந்திருக்கிறா ரென்று அறிவித்தான்.

ராஜஸிம்:—கூடாரத்துக்குள் வந்து பார்ப்பதற்கு இஷ்டமிருந்தால் ஒருவராய் வந்து பார்க்கலாம். ஸைன்யத்துடன் பார்க்கவேண்டுமென்று இஷ்டமிருந்தால் வெளியில் இருக்க வேண்டும். நானும் ஸைன்யத்துடன் வருகிறேன்.

விக்கிரமஸிம்ஹன் கூடாரத்துக்குள் வந்து பார்க்கிறதற்கே இஷ்டப்பட்டு ஒருவனாகவே வந்து தரிசனம் செய்தான். வரும்பொழுதே ராஜஸிம்ஹன் அவனுக்கு வெகு ஆதரவுடன் ஆசனங்கொடுத்து உட்காரும்படி சொன்னான். விக்கிரமஸிம்ஹன் ராணாவுக்குக் காணிக்கைகள் கொடுத்தான். உதயபுரத்திய ராணா ரஜபுத்திரர்களுக் கெல்லாம் பிரதானமானவ னாதலால் காணிக்கைகளுக் குரியவனாயிருந்தான். ஆனால் ராஜஸிம்ஹன் அவைகளைப் பெற்றுக் கொள்ளாமல், "தங்கள் காணிக்கைகள் மொகலாய பாதுஷாவுக்குச் சேரத் தக்கவை" என்று சொன்னான்.

விக்கிரமஸிம்.—மகாராணா ராஜஸிம்ஹன் ஜீவித்திருக்கும்பொழுது ரஜபுத்திர னொருவனும் டில்லி பாதுஷாவுக்குக் காணிக்கை கொடுக்கமாட்டானென்று நம்புகிறேன். மகாராணா என் குற்றத்தை மன்னிக்கவேண்டும். நான் தெரியாமல் அந்தக் காகித மெழுதினேன். தாங்கள் மொகலாயரைத் தோற்கடித்தாற்போல் ஸமஸ்த ரஜபுத்திரர்களும் சேர்ந்து தங்களுக்குட்பட்டுக் காரியங்களைச் செய்தால் மொகலாய ராஜ்யம் நாசத்தையடையு மென்பதற்குச் சந்தேகமில்லை. நான் எழுதின காகிதத்தில் கடைசியில் எழுதியிருந்த பாகத்தை நினைத்துக் கொள்ளவேண்டும். பின்னும் இரண்டொரு ஸாமக்கிரியைகள் கொண்டுவந் திருக்கிறேன். முதல் இந்த இரண்டாயிரம் குதிரைப்படை. இரண்டாவது எனக்குச் சொந்தமான இந்தக் கத்தி. இப்பொழுதுகூட இந்தக் கைகளில் கொஞ்சம் பலமுண்டு. என்னை எந்தக்காரியத்தில் நியமித்தாலும் நான் பிழைத்திருக்கிற வரையிலும் அந்தக் காரியத்தைச் சரியாய் சித்திக்கும்படியான பிரயத்தனங்களைச் செய்வேன்.

ராஜஸிம்ஹன் மிகவும் சந்தோஷத்துடன் தன் உள்ளத்திலுள்ள ஆநந்தத்தை விக்கிரமஸிம்ஹனுக்குத் தெரியும்படி சொல்லி, "துஷ்டர்களான மொகலாயர் என் கையிலகப்பட்டுக் கொண்டிருந்தார்கள். உடன்படிக்கை செய்து கொண்டு தப்பிப் பிழைத்தார்கள். தப்பித்துக் கொண்ட பிற்பாடு உடன்படிக்கை செய்து

கொள்ளவில்லையென்று சொல்லுகிறதுந்தவிர மறுபடியும் சண்டைசெய்கிறார்கள். டிலீர் கான் ஸைனியத்துடன் அக்பரின் ஸகாயத்திற்காக வந்துகொண்டிருக்கிறான். டிலீர் கானை மார்க்கத்திலேயே மறித்து அடித்துவிடவேண்டும். அவன் வந்துஅக்பருடன் சேர்ந்துகொண்டால் குமார ஜயஸிம்ஹனுக்கு ஆபத்து நேரிடும். அதற்காக நான் கோபிநாத டாகூரை அனுப்புவதாயிருந்தேன். ஆனால் அவன் ஸைனியம் வெகு அற்பம். என் ஸைனியத்திலிருந்தும் சில பாகத்தை யனுப்புகிறேன். மாணிக்கலால ஸிம்ஹன் என்று என் சேனாதிபதியொருவன் வெகுஸமர்த்தன். அவன் இவர்களை யெல்லாம் கூட்டிக்கொண்டு போவான். ஆனால் நான் இந்த ஸ்தலத்தைவிட்டு அவுரங்கசீபு இருக்கிற விடத்துக்குப் போகக்கூடாது. அதுவுமன்றி என் ஸைனியத்திலிருந்தும் அதிகப்பேர்களை அனுப்பவும் முடியாது. தாங்கள் தங்கள்குதிரை வீரர்களுடன் அந்தச் சண்டைக்குப் போக வேண்டும். நீங்கள் மூன்று பேர்களும் சேர்ந்து டிலீர்கானை ஸைனியத்துடன் ஸம்ஹாரஞ் செய்யவேண்டும்'' என்று சொன்னான்.

விக்கிரமஸிம்ஹன் சந்தோஷத்துடன், ''தங்கள் கட்டளையைச் சிரசின்மேல் வைத்துக் கொள்வேன்'' என்றான்.

இப்படிச்சொல்லி விக்கிரமஸிம்ஹன் யுத்தத்துக்குப் போகிறதற்குத் தகுந்த பிரயத்தனங்கள் செய்வதற்கு அனுமதி பெற்றுக்கொண்டான். சஞ்சலகுமாரியின் வார்த்தை ஒன்றும் நடக்கவில்லை.

## பதினைந்தாம் அத்தியாயம்

## மபாரகன் மரணம்

கோபிநாத டாகூர், விக்கிரமஸிம்ஹன், மாணிக்கலாலஸிம்ஹன் இம்மூன்றுபேர்களும் டிலீர்கானைத் துவம்ஸம் செய்வதற்காகப் புறப்பட்டார்கள். அவன் வரவேண்டிய வழியில் மூன்றுபேர்களும் மூன்று இடங்களில்போயொளிந்துகொண்டு காத்துக்கொண் டிருந்தார்கள். விக்கிரமஸிம்ஹன் குதிரைப்படை கொண்டுவந்திருந்ததால், மலையின் தாழ்வரவுகளில், மேடுபள்ளமான இடங்களில் நிற்க முடியவில்லை. மலைமேலிருந்துகொண்டு யுத்தஞ்செய்ய முடியாதாகையால் அவன் பருவதத்தின் மேல் ஏறாமல் கொஞ்சம் மேடுபள்ளங்களில்லாச் சமதலமான இடந்தேடினான். அவன் மனத்துக்குப் பிடித்த விடமும் கிடைத்தது. அந்த இடத்திற்கு முன்னே ஒரு சிறிய காடு. அந்தக் காட்டின் பின்பக்கத்தில் தன் குதிரைகளை வரிசை வரிசையாய் நிறுத்தினான். அதற்கு மேல் பக்கத்தில் மாணிக்கலாலன் ராணுவின் காலாட் படைகளுடன் ஒளிந்துகொண்டிருந்தான். எல்லோருக்கும் பின்னே கோபிநாத டாகூர் நின்றுகொண்டிருந்தான்.

டிலீர் கான் அக்பரின் நிலைமையை நினைத்துக்கொண்டு கொஞ்சம் ஜாக்கிரதையாய் வந்துகொண்டிருந்தான். ரஜபுத்திரர் அங்கங்கே எங்கேயாவது ஒளிந்துகொண் டிருக்கிறார்களோவென்று நாலாபக்கங்களிலும் பார்த்துக்கொண்டு வந்துகொண் டிருந்ததால், விக்கிரமஸிம்ஹன் குதிரைப்படையுடன் காட்டுக்குப் பின்புறம் ஒளிந்துகொண்டிருந்தது தெரியவந்தது. அவர்களை அங்கேயிருந்து வெளிப்படுத்துவதற்காக டிலீர் கான் சில குதிரைவீரர்களையனுப்பினான். விக்கிரமஸிம்ஹன் பாக்கி விஷயங்களில் ஸ்தூலபுத்தியுள்ளவனாயிருந்தபோதிலும் யுத்தத்தில் வெகு தந்திரமும் பாண்டித்தியமும் உள்ளவனாயிருந்தான். அநேக சமயங்களில் வஞ்சகத்தன்மையே ரணபாண்டியத்தியமென்று கூறப்படுகிறது. அவன் மொகலாய சேனையுடன் ஏதோ யுத்தம் செய்வது போல் நடித்துவிட்டு புறங்காட்டி ஓடுவது போல் நடித்தான்.

டிலீர்கான் மாணிக்கலால னிருந்தவிடந் தாண்டிக் கொஞ்சம் முன்னேபோனான். மாணிக்கலாலன் ஒருகைப்புறமாய் ஒளிந்துகொண்டிருந்தது தெரியவில்லை. மாணிக்கலாலன் சிறிதளவுகூட சத்தஞ்செய்யவில்லை. டிலீர் கான்விக்கிரமஸிம்ஹனைத் துரத்தின பிறகு ரஜபுத்திரரெல்லாரும் ஓடிப்போய் விட்டார்களென்று நினைத்துக்கொண்டான். அதனால் முன்போல் அவ்வளவு ஜாக்கிரதையாய்ப் போகவில்லை. மாணிக்கலாலன் அதுசரியான சமயமில்லை என்று சும்மாவிருந்தான். கடைசியில் கோபிநாதடாகூர் ஒளிந்துகொண்டிருந்த இடத்துக்கு டிலீர் கான் வந்தான். அங்கே வழி இக்கட்டாகிக் கொண்டுவந்தது. அங்கே ஸைனியம் வர ஆரம்பிக்கும்பொழுதே கோபிநாதன் வழிப்போக்கனை புலி தின்னுவதற்காக வந்து உட்காருவது போல் ஸைனியத்துடன் வந்துநின்றான். டிலீர் கான் மபாரகனைப் பார்த்து முந்தியுள்ள ஸை

னியத்தைக்கொண்டு மார்க்கத்தை மறித்துக் கொண்டிருக்கிற ரஜபுத்திரர்களை விரட்டும்படி சொன்னான். ஆனால் கோபிநாதனை விரட்டுகிற தெப்படி? இக்கட்டான மார்க்கத்தில் மொகலாயஸைனிகர் கொஞ்சம் பேர்கள்தாமிருந்தார்கள். வளையிலிருந்து ஊர்ந்து வெளியே வருகிறபொழுதே எறும்புகளைச் சிறுபிள்ளைகள் நசுக்கிவிடுவதுபோல் ரஜபுத்திரர் மொகலாய ஸைனிகர்கள் குறுகலான மார்க்கத்தில் வரவர அடித்துக் கொன்றுகொண் டிருந்தார்கள். இது இப்படியிருக்க, டிலீர் கான் முன்னே மார்க்கமில்லாமல் ஸைனியத்துடன் நடுமார்க்கத்தில் நின்றான். மாணிக்கலாலன் இது சரியான சமயமென் றறிந்துகொண்டான். அவன் தன் ஸைனியத்துடன் மலையின்மே லிருந்து வந்து டிலீர் கான்மேல் விழுந்தான். டிலீர் கான் சேனையிலிருந்தவர்கள் பிராணனில் ஆசையை விட்டுச் சண்டைபோட்டார்கள். ஆனால் அதே சமயத்தில் விக்கிரமஸிம்ஹன் தன் குதிரை வீரர்களுடன்வந்து டிலீர்கான் ஸைனியத்தின் பின்னே நின்று கொண்டான். அப்போது மூன்று பக்கங்களிலேயும் சூழப்பட்டு மொகலாயர் ஒரு நாழிகைகூட நிற்க முடியாமற் போயிற்று. முடிந்தவர் ஓடிப்போய்ப் பிழைத்தார்கள். அநேகருக்கு ஓடுவதற்கு மார்க்கம் கிடைக்கவில்லை. அவர்கள் குடியானவன் அறுப்பரிவாளுக்கு அகப்பட்ட பயிர்போல் வெட்டுண்டு மாண்டார்கள்.

கோபிநாதனுக்கு முன் நின்ற சிலர் மாத்திரம் முதுகு காட்டாமல் நின்றார்கள். பிராணனைத் துரும்பாக நினைத்துக்கொண்டு சண்டை செய்துகொண் டிருந்தார்கள். அவர்கள் மொகலாய சேனையில் ஸாரமானவர்கள். எல்லாரும் யௌவனப் பிராயமுள்ளவர்கள். அவர்களுக்குத் தலைவன் மபாரகன். ஆனால் அவர்களுக்கும் எதிர்த்து நிற்க முடியாமற் போயிற்று. நிமிஷத்துக்கு நிமிஷம் ஒவ்வொருவனாய் விழுந்திறந்தார்கள். கடைசியில் ஐந்தாறு பேர்கள் மாத்திரம் பாக்கி நின்றுகொண் டிருந்தார்கள்.

மாணிக்கலாலன் இதைத் தூரத்திலிருந்து பார்த்து, அவ்விடத்துக்குஜாக்கிரதையாய்வந்து ரஜபுத்திரர்களைப் பார்த்து, "இவர்களை யடிக்க வேண்டாம். இவர்கள் வீரபுருஷர்கள். இவர்களை விட்டுவிடுங்கள்" என்றான்.

ரஜபுத்திரர் சற்று நின்றார்கள். அப்பொழுது மாணிக்கலாலன், "நீங்கள் புறப்பட்டுப் போங்கள். உங்களை விட்டுவிட்டோம். நீங்கள் ஒன்றும் சொல்லவேண்டாம்" என்றான்.

ஒரு மொகலாயவீரன், "நாங்கள் யுத்தத்தில் ஒருபொழுதும் புறங்காட்டினதில்லை. இப்பொழுதும் முதுகுகாட்டி யோடுவதில்லை" என்றான். சிலர் மறுபடியும் சண்டைபோட ஆரம்பித்தார்கள். அப்பொழுது மாணிக்கலாலன் மபாரகனைக் கூப்பிட்டு, "கான் ஸாகேப்! மறுபடியும் யுத்தஞ்செய்து என்ன செய்வீர்?" என்று கேட்டான்.

மபாரகன்.—செத்துப் போவேன்.

மாணிக்க. — எதற்காகச் செத்துப்போக வேண்டும்?

மபாரகன். — மரணந்தவிர எனக்கு வேறு கதியில்லை என்பது தங்களுக்குத் தெரியாதா?

மாணிக்க. — அப்படியானால் கலியாணம் பண்ணிக்கொண்டது எதற்காக?

மபாரக.—சாகிறதற்குத்தான்.

இந்தச் சமயத்தில் ஒருதுப்பாக்கியின்சத்தம் மலைகளில் எங்கும் பிரதிதொனித்துக்கொண் டிருந்தது. சத்தம் காதில்பட்டதோ இல்லையோ மபாரகன் சிரசு உடைந்து கீழேபூமியில் விழுந்தான். மாணிக்கலாலன் பார்க்கவும், மபாரகன் பிராணன் போய்விட்டது. குண்டு தலைக்குள் பாய்ந்து விட்டது. மாணிக்கலாலன் சுற்றிமுற்றிலும் பார்க்கவும், மலையின் தாழ்வரையில் ஒரு ஸ்திரீ துப்பாக்கியைக் கையில் வைத்துக் கொண்டிருந்தாள். துப்பாக்கியின் வாயிலிருந்து புகை வந்துகொண் டிருந்தது. அவள் பைத்தியம் பிடித்த தரியா வென்று சொல்லவேண்டிய அவசியமில்லை.

மாணிக்கலாலன் அவளைப் பிடித்துவரும்படி சொன்னான். அவள் சிரித்துக்கொண்டு ஓடிப்போனாள். அது முதற்கொண்டு தரியாவை இந்தப் பூமியில் யாரும் காணவில்லை.

யுத்தமானவுடன், ஜேப உன்னீஸா சண்டையில் மாபரகன் இறந்தா னென்கிற சமாசாரம் கேட்டாள். அப்பொழுது அவள் தன் ஆபரணங்களை யெல்லாம் கழற்றி எறிந்து உதயஸாகரத்துக் கரையில் பூமியின்மேல் விழுந்தாள்.

## பதினாறும் அத்தியாயம்

## சஞ்சலையின் மணம்

யுத்தம் முடிந்தவுடன் விக்கிரமஸிம்ஹன் ஜயசமாசாரத்துடன் ராஜஸிம்ஹன் தளமிறங்கி

யிருந்த விடத்திற்கு வந்தான். ராஜஸிம்ஹன் ஆதரவுடன் அவனை ஆலிங்கனம் பண்ணிக் கொண்டான். விக்கிரமஸிம்ஹன், "இன்னொரு வார்த்தை பாக்கியிருக்கிறது. அது என் மகளைப்பற்றியது. பூரணமனத்துடன் ஆசிர்வாதஞ்செய்து அந்தப் பெண்ணைத் தங்களுக்குப் பாணிக்கிரகணம் செய்துகொடுக்க இஷ்டமுள்ளவனா யிருக்கிறேன். தங்களுக்கு அப்படிச் செய்வதில் இஷ்டமோ?" என்றான்.

ராஜஸிம்.—அப்படியானால் உதயபுரம்போக வேணும்.

விக்கிரமஸிம்ஹனும் உதயபுரம்சென்றான். அதே இராத்திரி ராஜஸிம்ஹன் சஞ்சலகுமாரியைப் பாணிக்கிரகணம் செய்துகொண்டான். அதற்குப்பிறகு நடந்த சங்கதிகளைச் சொல்லுவது இந்துதேசச் சரித்திரக்காரர்களைச் சேர்ந்தது. மறுபடியும் அவுரங்கசீபு தானே சொந்தமாய்ப்போய் ராஜஸிம்ஹனைத் துவம்ஸம் செய்யவேண்டுமென்று முயற்சிசெய்தான். அஜிமன் வந்து அவனுடன் சேர்ந்துகொண்டான். ராஜஸிம்ஹன் பிரசித்திபெற்ற மார்வார் தேசத்தரசனாகிய துர்க்கதாஸனோடு சேர்ந்துகொண்டு அவுரங்கசீபை எதிர்த்தான். அவுரங்கசீபு மறுபடியும் தோற்கடிக்கப்பட்டு அவமானமடைந்து ஓடிப்போனான். ரஜபுத்திரர் அவனுடைய சேனையிலிருந்த சொத்தெல்லாவற்றையும் லூடிசெய்துகொண்டார்கள்.

அவுரங்கசீபு அஜிமனோடு பயத்துடன் ஓடி ராணாவின் பூர்வ ராஜதானியாயிருந்த சித்தூரில் போய்த் தங்கிக்கொண்டான்.

ஆனால் அங்கேயும் அவனுக்கு க்ஷேமமுண்டாகவில்லை. ஸுபலதாஸன் என்கிற ஒரு ரஜபுத்திர ஸேனாதிபதி பின்னே போய் சித்தூருக்கும் ஆஜ்மீருக்கும் மத்தியில் சேனையை ஸ்தாபித்துக்கொண்டு நின்றான். மறுபடியும் ஆகாரத்துக்கு வேண்டிய சாமான் முதலானவை மறிக்கப்பட்டுப் போகுமோ என்கிற பயத்தால் அவுரங்கசீபு ரோஹில்கான் என்ற ஸேனாதிபதியை பன்னீராயிரம் சிப்பாய்களுடன் போய் ஸுபலதாஸனுடன் சண்டை செய்ய அனுப்பிவிட்டு தன்பாட்டுக்குத் தான் ஆஜ்மீர்பக்கம் ஓடிப்போனான். அதற்குப் பிறகு உதயபுரப்பக்கம் முகத்தைத் திருப்பிப் பார்க்க முடியவில்லை. உதயபுரம் போகிற ஆசை அத்துடன் முடிந்தது. இது இப்படியிருக்க, ஸுபலதர்ஸன் ரோஹில்கானை எதிர்த்து அவனைத் தோற்கடித்தான். ரோஹில்கான் ஆஜ்மீருக்குப் புறப்பட்டுப் போனான். இன்னொரு பக்கத்தில் ராஜஸிம்ஹனின் இரண்டாவது புத்திரன் குமாரபீமஸிம்ஹன் மொகலாய அதிகாரத்துக்குச் சேர்ந்திருந்த குஜரத் தேசத்தில் பிரவேசித்துக்கிராமங்கள் பட்டணங்களையெல்லாம் கொள்ளை யடித்துக்கொண் டிருந்தான். அநேக பிரதேசங்களைக் கைவசம் பண்ணிக்கொண்டு ஸௌராஷ்டிரதேசம் வரைக்கும் ராஜஸிம்ஹனது அதிகாரத்தை ஸ்தாபித்துக் கொண்டிருந்தான். பிரஜைகள் கொள்ளைகளால் வருந்தியதைக்கண்டு ராஜஸிம்ஹன் தயைகொண்டு பீமஸிம்ஹனைத் திரும்பிவரும்படி உத்தரவு செய்தான்.

ஆனால் மந்திரியாகிய தயாளுஷா அப்பேர்ப்பட்ட சுபாவமுள்ளவனல்ல. அவன் யுத்தத்தில் புகுந்து மால்வா தேசத்தில் முஸல்மானரை ஸர்வநாசம் பண்ணிக்கொண் டிருந்தான். தயாளுஷா குமார ஜயஸிம்ஹனுடன் சேர்ந்து இருவரும் ஷஹஜாத் அஜிம்ஷானை எதிர்த்துச் சித்தூருக்குச் சமீபத்தில் யுத்தம் செய்தார்கள். அஜிம்ஷான் ஸைனியத்தைப் பறிகொடுத்துத் தோற்றுப்போய் ஓடிப்போனான்.

நான்கு வருஷகாலம் யுத்தம் நடந்தது. மேன்மேலே மொகலாயர் தோல்வியடைந்தார்கள். கடைசியில் அவுரங்கசீபு நிஜமான உடன்படிக்கை செய்துகொண்டான். ராணா கேட்டதற்கெல்லாம் ஒப்புக்கொள்ளுவதற்குத் தயாராயிருந்தான். மொகலாயர் இப்பேர்ப்பட்ட பள்ளிக்கூடத்தில் ஒருநாளும் படித்ததில்லை.

முற்றிற்று.

---

மாமிசத்திலிருந்து பட்டு :—உபயோகமற்ற குதிரைகளையும் மாடுகளையும் கொன்று அவைகளின் மாமிசத்தை ஒரு திராவகத்திற் போட்டு தசைகளின் மெல்லிய நார்களைப் பிரியச்செய்து, அந்நார்களைத் திரும்பவும் மற்றொரு திராவகத்திற் போட்டு அவைகளுக்குப் பட்டின் பளபளப்பு உண்டாகும்படி செய்வதாகவும், அவசியமானால் பட்டுப்போன்ற அவ்வஸ்துவுக்கு ரப்பர் மேற்பூச்சுப் பூசி, நீரில் நனையாததாகச் செய்யமுடியு மென்றும் இங்கிலாந்தில் லங்காஷைர் என்னும் பட்டணத்தில் பிரசுரமாகும் தினப்பத்திரிகை ஒன்றிலிருந்து தெரியவருகிறது.

---

## பிரபஞ்ச வர்த்தமானம்

### NEWS AND NOTES

கருப்பஞ் சர்க்கரை.—டென்மார்க் தேசத்தவரான மிஸ்டர் ஷ்மிட் என்னும் இரசாயன சாஸ்திரியொருவர் கருப்பஞ் சாற்றைச் சுண்ணும்பில் சுத்தஞ்செய்யும் கஷ்டத்தை யொழிக்க ஒரு நூதன வழி கண்டுபிடித்திருக்கிறார். அவரது முறையில் ஆலையிலிருந்து வரும் கருப்பஞ்சாறானது ஒரே தடவையில் பரிசுத்தமான நீரைப்போல் தெளிந்து போகிறது; அதைக் காய்ச்சினல் சுத்தமான சர்க்கரை கிடைக்கிறது. அவர் கண்டுபிடித்திருக்கும் சுலபமான முறை யாதெனில், ஆலையிலிருந்து வரும் கருப்பஞ்சாற்றில் சுண்ணும்பு போடுவதற்குப் பதிலாக மிகவும் நுண்ணிய அணுக்களாகப் பொடிசெய்யப்பட்ட கரியைப்போட்டுக் கடைந்து, பிறகு வடிக்கட்டுவதுதான். அவ்வாறு கடைந்து வடிக்கட்டப்பெற்ற சாறு அசுத்தம் முற்றிலும் நீங்கித் தெளிந்து போகிறது. இம்முறைக்கவசியமான கரியை கருப்பஞ்சக்கையை எரிப்பதனலேயே அவர் சேகரிக்கிறார். மிஸ்டர் ஷ்மிட் ஜாவா என்னும் தீவிலுள்ள கரும்பாலைக்கூடத்தில் வேலையாயிருப்பதாகவும், அங்கு அவர் வெகுகால்மாகப் பரீக்ஷைசெய்து கடைசியாக இந்நூதனமுறையைக் கண்டுபிடித்தாரென்றும், இம்முறையை அனுஷ்டிப்பதனல் சர்க்கரை செய்வது சுலபமாவதுமன்றி, கருப்பஞ் சாற்றிலிருந்து கிடைக்கும் சர்க்கரையின் அளவும் அதிகமாகிறதென்றும் தெரியவருகிறது.

*
* *

குழந்தை கற்கத் தொடங்கும் வயது.—மிகவும் சிறுவயதிலேயே ஒரு குழந்தைக்குப் படிக்கக் கற்றுக்கொடுப்பதனல் அக்குழந்தைக்குத் தீங்கு நேரிடுமென்ற அபிப்பிராயம், இப்போது அவ்விஷயத்தை நன்றாய் ஆராய்ந்து பார்த்துள்ளவர்களால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. சாதாரணமான வளர்த்தியுள்ள குழந்தை, நான்கு வயதிலேயே படிக்கத் தொடங்க வேண்டுமென்றும், ஆறுவயதாகும்போது அக்குழந்தை பிறர்பேசித் தான் தெரிந்துகொள்ளக்கூடிய எதையும் படிக்குந் திறமுடையதாகவிருக்கவேண்டுமென்றும் ஆராய்ந்தோர் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

ஐரோப்பிய யுத்தத்தில் வென்றவர் யார்? வெகுகாலமாக பொருள்களைச்செய்து விற்பதில் ஜர்மனிக்கும் இங்கிலாந்துக்கும் போட்டியாக இருந்ததில், ஐரோப்பிய மகாயுத்தகாலத்தில் ஜர்மனி போட்டிபோடுந் திறனற்றுப் போயிற்று. இப்போது ஜர்மனி தேசத்துப் பொருள் செய்வோர்கள் உலகமுழுவதிலும் தங்கள் சரக்குகள் முந்தும்படி செய்ய முயன்று வருகிறார்கள். அம்முயற்சி பலிக்கும் போலவே தோன்றுகிறது. ஆகையினல், வியாபாரப் போட்டியும் ஐரோப்பிய யுத்தத்தின் முக்கியக் காரணங்களி லொன்றென்று கருதுவோர், யுத்தத்தில் வென்றது இங்கிலாந்துமல்ல அமெரிக்காவுமல்ல ஜர்மனியேயென்று அபிப்பிராயப்படுகிறார்கள். இவ்வபிப்பிராயம் "லண்டன் அபிப்பிராயம்" என்னும் பத்திரிகையில் ஒரு விநோதப் படத்தினல் விளக்கப்பட்டிருக்கிறது. அப்படத்தில் இங்கிலாந்து, தானே போரில் வென்றதாக எண்ணும் மனிதனைகவும், அமெரிக்கா போரில் வென்றது தானகத்தான் இருக்கவேண்டுமென்று ஊகிக்கும் மனிதனைகவும், ஜர்மனி போரில் வென்றது தான் தான் என்று நன்றாயறிந்த மனிதனைகவும் வேடிக்கையாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

*
* *

மேஸோபொடேமியாவில் ஹிந்து நாகரிகம்.—நார்வே தேசத்தவர்கள் இந்துக்களின் பூர்வீக நாகரிக ஆராய்ச்சிக்காக ஏற்படுத்தியிருக்கும் ஆராய்ச்சிச் சாலையைச் சேர்ந்த டாக்டர் ஸ்டென் கோனே என்பவர் மெஸொபொடேமியாவிலுள்ள சிலாசாசனங்களைப் பரிசீலனை செய்ததில், அத்தேசத்தில் சுமார் 3300 வருஷங்களுக்கு முன் மிதானி என்னும் ஜாதியார்கள் குடியிருந்ததாகவும், அவர்கள் மற்றொரு ஜாதியாருடன் செய்துகொண்ட உடன்படிக்கையில் ரிக்வேத தேவதைகளான மைத்திரா வருணர்கள், அசுவினிகள், இந்திரன் இவர்களது அருள் கிடைக்கவேண்டுமென்ற பிரார்த்தனை காணப்படுகிறதென்றும், அந்நாடு 3700 வருஷங்களுக்கு முன் அந்நாகரிகமடைந்திருக்க வேண்டுமென்றும் தகுந்த சாக்ஷியங்களினல் நிருபித்திருப்பதாக ஸ்ரீ கே. பி. ஜயஸ்வால் "நவீன விமரிசனம்" என்னும் பத்திரிகையில் எழுதுகிறார்.

